# இந்த காமிராவைப்பற்றி நவீனம் ஒன்றும் இல்லை

ஆக்பா ஸிங்க்ரோ பாக்ஸ் காமிரா எப்பொழுதும் ஒரேமாதிரிதான். வலுவுள்ளதாலும், நம்பகமானதாலும், மறுபடியும் மறுபடியும் நீங்கள் நல்ல படங்களை எடுப்பதற்கு அதை நம்பலாம். அதற்காக நீங்கள் மூளையைக் குழப்பவேண்டியதில்லை. கொக்கியை அழுத்தவேண்டியதுதான். உல்லாசப் பயணக்காட்சியோ குடும்பக் கோஷ்டியோ, அல்லது மிக முக்கியமான சம்பவங்களோ. இவையெல்லாம் மிக அழகாகப் படமாகிவிடுகின்றன.

ஜெர்மன் ஆக்பாவை புகைப்படத் தொழிலில் உலகப்புகழ்பெற்ற பெயராகச்செய்த அதே தொழிலியல் திறனுடன் ஆக்பா ஸிங்க்ரோ பாக்ஸ் காமிரா இப்பொழுது இந்தியாவில் தயாரிக்கப்படுகிறது. விலை ரூ. 36/-. உள்ளூர் வரி தனி.







ஏகபோக
விநியோகஸ்தர்கள்: **ஆக்பா இந்தியா** லிமிடெட்

பம்பாய் . நியு டில்லி . கல்கத்தா . மதராஸ்

# கல்கி



பட விளக்கம் 17ம் பக்கம்

## பொருளடக்கம்

சோபகிருது, மாசி 4 ★ பிப்ரவரி 16



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 23 ✹ தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் ✹ இதழ் 29

# வாழ்க சுதந்திரம், வாழ்க நிரந்தரம்!

இம்மாதம், முதல் இரண்டு நாட்களில் பெங்களூரில் தர்மத்துக்கோர் உற்சவமாகவே சுதந்திரக் கட்சியின் அகில இந்திய மகாநாடு நடைபெற்றது. புவனேசுவரத்தில் நடந்த காங்கிரஸ் மகாநாட்டுக்கு நேர்எதிர்மாருக, மக்கள் விடுதலைக்கு வழிவகுக்கும் விழாவாகச் சுதந்திரக் கட்சி சம்மேளனம் படாடோபமில்லாமல் இனிது நிறைவு பெற்றது.

சுதந்திரக் கட்சியைப் பற்றிப் பழித்துக் கூறப்படும் பல விஷயங்களை பெங்களூர் மகாநாடு நிர்மூலமாக்கியுள்ளது. சோஷலிஸம் சோஷலிஸம் என்று ஓயாமல் பேசுகிற காங்கிரஸைவிட, முதலாளிகளின் கட்சி என்று எதிர்க் கட்சிகளால் வர்ணிக்கப்படும் சுதந்திரக் கட்சிதான் தேசத்தின் சாமானிய மக்களுடைய நலனில் உண்மையான அக்கறை கொண்டிருக்கிறது என்பதை பெங்களூர் மகாநாடு அதன் தீர்மானத்தின்மூலம் நன்கு விளக்கியுள்ளது. மக்களுக்கு உடனடித் தேவையான பண்டங்களை உற்பத்தி செய்வதை விடுத்து, காங்கிரஸ் கோடிக்கணக்கில் செலவாகும் பெரும் பூதத் திட்டங்களைப் போடுவதைச் சுதந்திரக் கட்சி எதிர்ப்பதால் 'இந்தக் கட்சி, திட்டமே கூடாது என்கிறது; சர்க்காரின் தலையீடே கூடாது என்கிறது' என்றெல்லாம் எதிர்க் கட்சிக்காரர்கள் குற்றம் சாட்டுகிருர்கள் அல்லவா? அதையும் இந்தத் தீர்மானம் தவிடுபொடியாக்கியுள்ளது. மக்களுக்குக் குடிநீரும், உணவும், உடையும், வீடும், வேலை வாய்ப்பும் கிடைக்க முதலில் திட்டம் போடவேண்டும்; தேசப் பொதுவாழ்வுக்கு அடிப்படையான சாலைகள், ரயில் போக்குவரவு, மலிவான கட்டணத்தில் மின்சாரம், நீர்ப்பாசனம், கல்வி இவற்றைச் சர்க்காரே நிர்வகித்து உடனடியாக அபிவிருத்தி செய்யவேண்டும்' என்று கூறும் இந்தத் தீர்மானம் 'எங்கள் திட்டத்துக்கு மாற்ருகச் சுதந்திரக் கட்சியில் என்ன இருக்கிறது?' என்று இறுமாப்புடன் கேட்கும் ஆட்சியாளருக்கு ஆணித்தரமாக விடை தருகிறது. இதுவரையில் ஆயிரமாயிரம் கோடி ரூபாய்களை, என்றோ பலன் தரப்போவதாகக் கருதப்படும் கனரக ஆலைகளில் செலவிட்டுள்ள சர்க்கார் அந்தத் தொகையில் ஒரு பகுதியை நாட்டின் ஆதாரத் தேவைகளுக்காக உபயோகித்திருந்தால்கூட இன்று நாட்டில் எவ்வளவோ வளம் கொழிக்கும். ஆனுல் மக்களின் வளத்தைவிட ஆட்சியாளரின் அதிகாரத்தை அதிகரிக்கும் முறையிலேயே காங்கிரஸின் திட்டங்கள் தீட்டப்பட்டுள்ளன. இதைச் சுதந்திரக் கட்சி வியக்தமாக்கியுள்ளது. மக்கள் சுதந்திரத்தைப் பறிக்காமலே சுபிட்சத் திட்டம் வகுக்க முடியும் என்று காட்டியுள்ளது. 'சுதந்திரக் கட்சி பணக்காரர்களின் ஏகபோகத்தை வளர்க்க விரும்பும் கட்சி' என்று கூசாமல் கூறுகிற காங்கிரஸ்காரர்கள் 'சர்க்கார் துறையிலும் சரி, தனியார் துறையிலும் சரி ஏகபோகத்தை ஒழிக்க வேண்டும்' என்று சுதந்திரக் கட்சித் தீர்மானம் கூறுவதைக் கவனிக்க வேண்டும்.

உண்மையில் தனியார் சிலர் ஏகபோகம் பெறவும், விசேஷமான பெர்மிட்-லைசென்ஸ் சலுகை பெறவும் உதவி செய்து அதன்மூலம் கட்சியின் பணபலத்தைப் பெருக்கிக் கொள்வது காங்கிரஸ்தான். இதனை இல்லை என்று காங்கிரஸ் மறுக்குமானுல் அந்த மறுப்பைச் செயல் உருவத்தில் காட்ட ஒரு தர்ம நியாயமான சோதனையை ராஜாஜி வைத்திருக்கிருர். பெர்மிட் - லைசென்ஸ் வழங்குவதற்கென்றே கட்சிச் சார்பில்லாத ஒரு போர்டு அமைக்க வேண்டும் என்று அரியதொரு












யோசனை சொல்லித் தீர்மானமும் செய்யப்பட்டிருக்கிறது. இதற்கு அரசியலார் தயங்கினால், இந்த அடிப்படையின்மீதே எல்லா எதிர்க் கட்சிகளும் ஒன்றுசேர்ந்து காங்கிரஸின் ஒழுங்கீனத்தை அம்பலப் படுத்த முடியும் என்கிறார் ராஜாஜி.

ஆட்சியாளர்கள் நாளுக்கு நாள் அதிகார வெறி மிகுந்து செய்கிற உற்பாதங்களைக் கண்டு மனம் கசந்து போனதால் வழக்கத்தைவிட வெளிப்படையாகவே இம்முறை நாட்டின் பிரபல பத்திரிகைகள் யாவும் சுதந்திரக் கட்சி சம்மேளனத்தின் பயனைப் பாராட்டி எழுதி யுள்ளன. முக்கியமாக, ராஜாஜி யோசனை கூறும் நீதி ஒன்றுக்கே அடங்கிய பெர்மிட் — லைசென்ஸ் போர்டை வரவேற்றுள்ளன. என்றாலும், 'இந்தப் போர்டிலும் ஒழுங்கீனம் நடக்கக் கூடுமல்லவா?' என்று சில பத்திரிகைகள் கேட்கின்றன. தகுந்த நபர்கள் அடங்கியதும் நீதிஸ்தலங்களைப் போல் அதிகாரம் பெற்றதுமான போர்டில் ஒழுங்கீனம் நடக்காது. பெர்மிட் லைசென்ஸ் வழங்குவதில் ஒழுங்கீனமாக நடப்பதன் மூலம் ஒரே ஒரு அரசியல் கட்சி மட்டும் மற்ற கட்சிகளைப் பிரதிகூல நிலையில் வைத்து, தொழில்துறையைத் தானேஅடக்கிவசப் படுத்திக்கொண்டு அதன் மூலம் திரவிய பலம் பெற்றுத் தேர்தல்களில் வோட்டு வியாபாரம்செய்யும் அக்கிரமம் அழியும்.

இன்னொரு முக்கியமான தீர்மானம் தேர்தல் சீர்திருத்தத்தைப் பற்றியது. சர்க்கார் செலவிலேயே வாக்காளர்களுக்குச் சீட்டுகள் கொடுக்கப்பட வேண்டும்; தேர்தல் அதிகாரிகள் மோட்டார் வண்டிகளில் வீடுதோறும் சென்று வோட்டுச் சேகரிக்க வேண்டும் என்ற யோசனைகள் பண பலத்தின் மூலம் வோட்டு வேட்டையாடுகிறவர்களைத் தவிர, யாரும் ஏற்றுக் கொள்ள வேண்டியனவாகும். பிரதேசப் பிரச்னைகளையும், தேசியப் பிரச்னைகளையும் குழப்பிக் கொள்ளாமல் வாக்காளர்கள் வோட்டுச் செய்ய வேண்டுமானால் ராஜ்ய சட்டசபைத் தேர்தலும், மக்கள் சபைத் தேர்தலும் வெவ்வேறு சமயங்களில் நடைபெற வேண்டும் என்ற கோரிக்கை பொதுமக்களின் உண்மையான கருத்து உறுதிப்படப் பெருதவி புரியும்.

பாங்குகளை யெல்லாம் சர்க்கார் உடைமையாக்கி விட்டால் எல்லா மக்

களின் சொத்து நிலவரமும் சர்க்காருக்குத் தெரிந்து விடும்; எனவே வருமான வரி கொடாமல் ஏய்ப்பது குறைந்து போகும் என்று காங்கிரஸில் சில மேதாவிகள் நினைக்கிறார்கள். இதனால் எவ்வளவு தீமையும் நேரும் என்பதைச் சுதந்திரக் கட்சியின் தீர்மானம் ஒன்று வெளிப்படுத்துகிறது. மக்கள் தற்போது சர்க்காரை நம்புவதில்லை. பாங்குகளைச் சர்க்கார் உடைமையாக்குவதால், பணம் சேர்ப்பவர்கள் அதைப் பாங்குகளில் போட மாட்டார்கள். இன்று நேரடியாகவோ, அல்லது பாங்கு கடன் கொடுத்து அதன் மூலமாகவோ தொழில் துறையில் முதலீடாகி நாட்டு உற்பத்தி பெருகுவதற்கு உதவும் தொகையில் பெரும் பகுதி அப்போது நாட்டுக்கு ஒரு பயனும் இல்லாமல் ஒளித்து வைக்கப்படும் என்பதைத் தீர்மானம் எடுத்துக் காட்டுகிறது.

பதினேழாவது திருத்தத்தைக் கண்டிக்கும் சுதந்திரக் கட்சியின் தீர்மானம் இக் கட்சிதான் உழவர்களின் தனிப் பெரும் கட்சி என்பதை வெளிப்படையாக்கிற்று. சாசனத் திருத்தத்தைச் சர்க்கார் கைவிடாவிடில் நேரடி நடவடிக்கை எடுக்க நேரிடும் என்று தீர்மானம் கூறுகிறது.

நாட்டின் பாதுகாப்பில் நீக்குப் போக்குள்ள கொள்கையைக் கடைப் பிடித்து அர்த்தமற்ற 'நடு நிலைமை'யை விட்டு, இந்தியா தனது பழைய அந்தஸ்தைப் பெற வேண்டும் என்ற கட்சியின் கருத்து அதன் அயல் நாட்டுத் தீர்மானத்தின் மூலம் நிரூபணமாயிற்று.

உலக அரங்கில் இந்தியாவின் அந்தஸ்து உயர்வது போலவே, இந்தியாவுக்குள் ஒவ்வொரு ராஜ்யமும் அந்தஸ்தில் உயருமாறு அவற்றுக்கு உரிய அதிகாரங்களை அளித்து, அவை மத்திய சர்க்காரின் கைப்பாவையாக இருக்கும் நிலையை மாற்ற வேண்டும் என்று ஒரு தீர்மானம் நிறைவேற்றப் பட்டது. இதனைக் கவனித்து, பிரதேச நலன்களைக் காப்பதில் அக்கறை கொண்டவர்களெல்லாம் சுதந்திரக் கட்சியுடன் தோளோடு தோள் நிற்க வேண்டும்.

எல்லா எதிர்க் கட்சிகளுமே — தத்தம் சொரூபத்தை இழந்து விடாமலே — தோளோடு தோள் நின்று காங்கிரஸ் ஜமீன்தாரியை ஒழிக்கவேண்டும் என்பது தான் சுதந்திரக் கட்சியின் விருப்பம். அந்த விருப்பமும் ஒரு தீர்மானமாக உருக்கொண்டது.

மக்கள் சுதந்திரம், ஏழையர் நலன், ராஜ்யங்களின் அந்தஸ்து, தேசப் பாதுகாப்பு, நிர்வாகத் தூய்மை இவை யாவற்றிலும் சுதந்திரக் கட்சிக்குள்ள ஈடுபாடு பெங்களூர் மகாநாட்டில் மீண்டும் வலியுறுத்தப்பட்டது.

ராஜாஜி கேட்டுக் கொண்டதுபோல் கட்சியின் சிறப்புக்களைப் பிரசாரம் செய்ய ஊக்கமும் செயல் திறமையும் தூங்காமைக் குணமும் நிறைந்த ஆண், பெண் தொண்டர் படை நாள்தோறும் பெருகி வரவேண்டும். அப்படிப் பிரசாரமாகி, மக்கள் விழிப்புப் பெற்றால் தான் இந்த நாட்டில் சுதந்திரம் நிரந்தரமாக நிலைபெறும்.



## ஸ்ரீமதி அமிருத கவுர்

என்னுடைய அருமை நண்பர்களில் மேலும் ஒருவர் மறைந்து விட்டார்! இப்படித் திடீரென ராஜகுமாரி அமிருத கவுர் அம்மையார் நம்மையெல்லாம் விட்டுப் பிரிந்துவிடுவார் என்று நான் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. அன்பைப் பெருகிற பாங்கும், மிருதுவான இதயமும், தேசபக்தியும் கொண்டவர் ஸ்ரீமதி அமிருத கவுர். தம்முடைய இயற்கைக் குணங்களாலும், சிறப்பான பயிற்சியாலும் ஸ்ரீமதி அமிருத கவுர் அம்மை காந்திஜியின் உள்ளத்தில் தனிப்பட்ட ஒரு ஸ்தானத்தைப் பெற்றிருந்தார். அவருடன் நீண்ட காலம் சிநேகம் கொண்டிருந்த எனக்கு அவருடைய மறைவு பெரும் சோக சம்பவமாகும். பல விஷயங்களில் எனக்கு ஒத்த முறையிலேயே அவர் சிந்தித்து வந்தவர். என்னுடைய தனிமை நாள்தோறும் வளர்ந்து வருகிறது. —ராஜாஜி

# போகிற போக்கில்...



ஒரு நெடுஞ்சாலை ஒன்றில் இரண்டு திருடர்கள் சண்டை போட்டுக் கொண்டிருந்தார்கள். இதைப் பார்த்த ஒரு பெரியார் 'என்ன சண்டை?' என்று கேட்டார்.

அதற்கு அவர்களில் ஒருவன் சொன்னான்: "உங்களைக் கடப்பாறையால் தாக்க வேண்டும் என்று நான் சொல்லுகிறேன். இவனோ உங்களைக் கத்தியால் குத்தலாம் என்கிறான். இதுதான் சண்டை" என்று.

இதைக் கேட்ட அந்தப் பெரியவர் எந்த நிலையில் இருந்தாரோ அதே நிலையில்தான் இன்று இந்தியாவில் உள்ள 49,000 அரிசி மில்களும் இருக்கின்றன.

இந்திய சர்க்காரின் உணவு இலாகா உதவி மந்திரி ஓர் அறிக்கை விடுத்திருக்கிறார். அதாவது புவனேசுவர காங்கிரஸ் தீர்மானப்படி அரிசி மில்களை எடுத்துக் கொள்வது பற்றி அரசாங்கம் யோசிக்கிறதாம். என்ன யோசனை என்றால், "இந்த மில்களை அரசாங்கமே ஏற்று நடத்துவதா, அல்லது கூட்டுறவு சொஸைட்டிகளின் நிர்வாகத்தில் விடுவதா?" என்பதேயாம்.

இந்த மந்திரியின் அறிக்கைப்படி மில்களை எடுப்பதென்பது முடிவாகி விட்டது. எடுத்த பின்னர் என்ன செய்வது என்றுதான் யோசிக்கிறார்கள். எந்த முடிவு எடுத்தாலும் ஒன்று மட்டும் உறுதி. இன்றுள்ள அரிசிப் பஞ்சம் இன்னும் பயங்கரமாக விசுவரூபம் எடுக்கும். தாது வருடப் பஞ்சத்தை விடக் கொடிய பஞ்சம் தலை விரித்தாடப் போகிறது.

ஃ ஃ ஃ

சமீபத்தில் சுகவீனமுற்ற ராஜாஜி பூர்ண சுகம் பெற்றுக் கலந்து கொண்ட முதல் பெரிய நிகழ்ச்சி பெங்களூரில் கூடிய மூன்றாவது சுதந்திரக் கட்சி மகாநாடுதான். இந்த அகில இந்திய மகாநாட்டினைத் தொடங்கி வைத்துப் பேசிய ராஜாஜி தமது உரையின் கடைசி வாக்கியமாக, "என்னால் அதிகம் காத்திருப்பதற்கில்லை" என்று முடித்தார். இதைக் கேட்ட பிரதிநிதிகள் கண் கலங்கி விட்டனர். ஆனால் இந்தக் கலக்கம் அதிக நேரம் நீடிக்கவில்லை. அடுத்து வந்த தீர்மான விவாதங்களின்போது ராஜாஜி அவர்கள் குறுக்கிட்டு, தமக்கே உரிய நகைச்சுவையுடன் பேச ஆரம்பித்து விட்டார். சற்று நேரத்துக்குமுன் கண் கலங்கிய பிரதிநிதிகள் கலகலவெனச் சிரிக்க ஆரம்பித்து விட்டனர். இவ்வளவு உத்வேகமும் உற்சாகமும் உள்ள ராஜாஜி இன்னும் பல்லாண்டு திடகாத்திரராக வாழ்வார் என்று மனம் தெளிந்தார்கள்.

ஃ ஃ ஃ

குடியரசு தின விழாவில் நடந்திருக்கும் ஒருசில சம்பவங்களை மேலிடத்தார் கவனிக்க வேணும். அசோகச் சக்கரமும் மூவர்ணச் சின்னமும் கொண்ட அரசாங்கக் கொடி நமது தேசியக் கொடியாகும். இந்தக் கொடிக்குக் கட்சி வேறுபாடின்றிச் சகலரும் மரியாதை செலுத்த வேண்டும் என்பது மரபு. ஆனால் குடியரசு தின விழாவை ஊர் ஊராகக் கொண்டாடிய காங்கிரஸார் இந்த மரபை மறந்து விட்டார்கள். அசோக சக்கரக் கொடியைத் தாழ்த்தியும், காங்கிரஸின் கைராட்டைக் கொடியை உயர்த்தியும் பல இடங்களில் பறக்க விட்டிருக்கிறார்கள். இதில் அதிகாரிகளும் கலந்துகொண்டதுதான் நம்மைத் திடுக்கிட வைக்கிறது.

பிளாக் டெவலப்மெண்ட் என்ற சமுதாய வளர்ச்சித் திட்ட அதிகாரிகள் கிராமங்களில் குடியரசு விழாவைக் கொண்டாடி யிருக்கிறார்கள். இவர்கள் எங்கெங்கு விழாக் கொண்டாடினார்களோ அங்கெல்லாம் கொடிக் குழப்பம் சர்வ சாதாரணமாக இருந்திருக்கிறது.

கிராமவாசிகளுக்கு இந்தக் குழப்பத்தைக் காண என்ன தோன்றும்? சர்க்காரும் கட்சியும் ஒன்று, ராட்டைக் கொடியைச் சர்க்கார் கொடி போல் மதித்து வணங்கி நடக்கவேண்டும்; இல்லையென்றால் ஆபத்து என்ற உணர்வு தான் ஏற்படும். இந்த உணர்வு வந்து விட்டால் மற்றக் கொடிகளை மதிப்பார்களா? பிறகு ஜனநாயகத்துக்கு இடமேது?

நகரசபைத் தேர்தல் நடக்கும் இப்போது தான் கொடிக் குழப்பம் காங்கிரஸுக்கு எவ்வளவு சௌகரியம் செய்கிறது என்பது தெளிவாகத் தெரிகிறது. — **சிட்டுக்குருவி**

---

## மக்கள் விடுதலைக்கு மகோற்சவம்

நாட்டுக்கு அந்நியர் ஆட்சியிலிருந்து கிடைத்த விடுதலை நிறைவு பெறவேண்டுமானால் மக்களுக்கு அரசாங்கக் கொடுமையிலிருந்து விடுதலை கிடைக்க வேண்டும். இந்த விடுதலையைப் பெற்றுத் தரவே தோன்றியுள்ள சுதந்திரக் கட்சியின் தேசிய மகாநாடு பிப்ரவரி 1, 2 தேதிகளில் பெங்களூரில் விமரிசையாக நடைபெற்றது. சுதந்திரக் கட்சியின் தனிப்பெரும் தலைவரான ராஜாஜி மகாநாட்டில் உரை நிகழ்த்துவதையும், நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து – பல்வேறு துறைகளைச் சேர்ந்த 600 பிரதிநிதிகள் இவ்விழாவில் குழுமியிருந்ததையும், அக்கிராசனராகிய ஆசாரிய ரங்கா, பொதுக் காரியதரிசி ஸ்ரீ எம். ஆர். மஸானி, கர்நாடகத் தலைவர் ஸ்ரீ ஜினராஜ ஹெக்டே, ஜயப்பூர் மகாராணி ஸ்ரீமதி காயத்ரி தேவி ஆகியோர் மகாநாட்டில் பங்கு கொள்ளும் காட்சியையும், இவ்விழாவின் சிறப்புக்கு முக்கிய காரணஸ்தரான பெங்களூர் ஸ்ரீ வி. டி. ஸ்ரீநிவாஸன் அவர்கள் ராஜாஜியை அழைத்து வருவதையும் எதிர்ப் பக்கம் காண்கிறீர்கள்.

# கல்கி வெள்ளிவிழா பரிசுத்திட்டம்





இலக்கிய உலகில் இணையற்ற பணி புரிந்து உங்கள் பேர் அபிமானத்தைப் பெற்ற 'கல்கி'ப் பத்திரிகைக்கு 1965ம் வருஷம் ஆகஸ்டில் இருபத்தைந்தாவது வயது பிறக்கப் போகிறது. ஆம், எங்கள் மகிழ்ச்சியையும் உங்கள் மகிழ்ச்சியையும் ஒரு மகிழ்ச்சியாக்கிக் குதூகலம்அளிக்கப் போகும் நன்னாள் நெருங்கி வரவிருக்கிறது.

இந்த வெள்ளி விழா நிகழ்ச்சியை நாம் மகிழ்ச்சியுடன் கொண்டாட வேண்டாமா? அதற்கு இதோ ஒரு திட்டம் வகுத்திருக்கிறோம்.

**தொடர்கதை, சிறுகதை ஆகிய இலக்கியப் பகுதிகளில் புது சகாப்தத்தை உண்டுபண்ணிய 'கல்கி'யின் இருபத்தைந்தாவது ஆண்டு விழாவை யொட்டி இப் பகுதிகளின் வளர்ச்சிக்காக இருபத்தையாயிரம் ரூபாய் பரிசு அளித்துக் கொண்டாடத் திட்டமிட்டிருக்கிறோம்.**

சிறந்த நாவல்களுக்கு மூன்று பரிசுகளும், சிறுகதைகளுக்கு மூன்று பரிசுகளும் தருவதாக இருக்கிறோம். சிறந்த நாவல்களுக்கு:

| | | | |
|---|---|---|---|
| முதற் பரிசு | ... | ரூ. | 10,000 |
| இரண்டாவது பரிசு | ... | ரூ. | 7,500 |
| மூன்றாவது பரிசு | ... | ரூ. | 5,000 |

சமூக நாவல்களா யிருக்க வேண்டும் அல்லது சரித்திர நாவல்களா யிருக்க வேண்டும் என்ற கட்டுத் திட்டங்கள் ஏதும் கிடையாது. தமிழ் இலக்கிய முன்னேற்றத்துக்கு மேலும் புகழ் தேடித் தருவதாக அமைய வேண்டும் என்ற ஒரே நிபந்தனைதான்.

அதே போலத்தான் சிறுகதைகளுக்கும்.

| | | | |
|---|---|---|---|
| முதற் பரிசு | ... | ரூ. | 1,000 |
| இரண்டாவது பரிசு | ... | ரூ. | 500 |
| மூன்றாவது பரிசு (பத்துக் கதைகளுக்கு — ஒவ்வொன்றுக்கும் ரூ. 100 வீதம்) | ... | ரூ. | 1,000 |

**ஆகமொத்தம் இருபத்தையாயிரம் ரூபாய் (ரூ. 25,000) பரிசுகளாக வழங்கப்பெறும்**

நந்தமிழ் நாட்டு எழுத்தாளர்களுக்கு ஒரு வேண்டுகோள். ஆற அமரச் சிந்தித்துத் தமிழ் மண்ணுக்கும், 'கல்கி' பத்திரிகைக்கும் அழியாப் புகழ் தேடித் தரும் சிறுகதை, நவீனங்களை எழுதுங்கள்.

**1964-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் முப்பதாம் தேதிக்குள் எங்கள் காரியாலயத்துக்கு வந்து சேரும்படி அனுப்பி வைத்தால் போதுமானது.**

இந்தப் போட்டி சம்பந்தமான எல்லா விஷயங்களிலும் ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது.

இலக்கியத் துறையிலே சிறந்து விளங்கும் அறிஞர்கள் பஞ்சாயத்தார்களாகப் பொறுப்பேற்றுப் போட்டிக்கு நீதி வழங்குவார்கள்.

எழுத்தாள அன்பர்களின் ஒத்துழைப்பு 'கல்கி'யின் பணியை மேலும் சிறந்தோங்கச் செய்யும் என்று நம்புகிறோம்.

# பட்டினத்துப் பேச்சு

**—காசி—**

சென்னைப் பட்டினத்தில் இப்போது சுமார் 400 பேர் தாங்கள் 'நகர பிதாக்கள்' ஆகி விடுவதற்காகத் தங்களை மும்முரமாகத் தயார் செய்து கொண்டிருக்கிறார்கள். 'நகரத் தாயார்'களாவதற்காக நிறுத்தி வைக்கப்பட்டிருக்கும் அல்லது தாங்களாகவே நின்று கொண்டிருக்கும் ஸ்திரீகள் ஆறே ஆறு பேர் தான்.

'கள் வேண்டுவோர் சங்கம்' என்ற ஒரு கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் தேர்தலுக்கு அபேட்சகராக நிற்கிறார்கள். இவர்கள் நூற்றுக்கு நூறு பங்கு தமிழ் நாட்டுப் பற்றுள்ளவர்கள். அசல் கள்ளைத் தவிர அந்நியச் சரக்கு எதையும் பகிஷ்கரிப்பார்கள் போலிருக்கிறது. இவர்களுள்



சிலேடை நிபுணர் இருந்தால் அவர் ''குடியரசாம், குடியரசு! குடிப்பதைச் சட்ட விரோதமாகச் செய்திருப்பவர்கள் முதலில் குடியரசு என்ற பெயரை மாற்றிக்கொள்ளவேண்டும்'' என்று ''என் பலம் கொண்ட மட்டும் கூறுகிறேன்'' என்று ஒரு காலி பாட்டிலை மேஜை மீது தட்டிக் கூறக் கூடும்.

❖

காஷ்மீரத்தைப் பற்றி ஐ. நா. வில் இப்போது விவாதிக்கப்படும் தீர்மானம் 110வது என்று புள்ளிவிவரக்காரர்கள் கூறுகிறார்கள். இதைப் பற்றி எங்கள் ஜோஸ்ய நிபுணர் கூறும் பலனாவது:

110ஐ ஆயிரத்தால் பெருக்கினால் 110,000 ஆகிறது. ஆகவே சபையில் அத்தனை வார்த்தைகள் வாய்ப் பேச்சினால் நாசஞ் செய்யப்படும். இலட்சத்துப் பத்தாயிரத்தை 1000ல் வகுத்தால் 110 வரும். இதோடு ஒன்றைக் கூட்டினால் 111 ஆகிறது. எனவே, இன்னும் சிறிது காலம் கழித்து 111வது தீர்மானம் உதயமாகும்.

❖

அமெரிக்கா 1964ம் வருஷத்தில் வெடித்துப் பரீட்சை பார்க்க விருக்கும் புதிய அணு குண்டிலிருந்து அணுக் கதிர்த் தூசு கிளம்பிக் காற்றை அசுத்தப்படுத்தாதாம். சுத்தமானதாக இருக்குமாம். இதற்குப் பிறகு கண்டு பிடிக்கப்படும் அணுகுண்டு வெடிக்கும்போது வெளியாகும் அணுக் கதிர்கள் நறுமணம் கமழ்ந்து கொண்டே சில லட்சம் பேரைக் கொல்லக் கூடும்.

❖

புதிய கல்வி மந்திரியான, காங்கிரஸ்காரரல்லாத திரு சக்னா அவர்கள் தமது காரியாலயத்துக்குள் காலடி வைத்து நடந்து சென்ற மாத்திரத்தில் 120 கமிட்டிகள் கால் இடறி இருக்க வேண்டும். அவர் உடனே அவற்றுள் 50 கமிட்டிகளை ஒழித்துக் கட்ட ஏற்பாடு செய்து விட்டார். கமிட்டி என்றால் அங்கத்தினர்கள், அவர்கள் பிரயாணச் செலவு இப்படிப் பல செலவுகள். அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்கு அதிகப்படியான வேலை வேறு. மற்ற மந்திரிகளின் இலாகாவிலுமாகச் சேர்த்துப் பார்த்தால் கிட்டத்தட்ட ஆயிரம் கமிட்டிகள் இருக்கும் போலிருக்கிறது. இப்படிக் கமிட்டிகள், காரியாலயங்கள் பல நூற்றுக் கணக்கில் ஏற்படும் போது அவற்றுள் எது எது என்னென்ன வேலை செய்கிறது என்று கணக்கு எடுக்க முடியாது. ஏதாவது ஒரு கமிட்டியோ காரியாலயமோ நடுவில் எடுத்துவிடப்பட்டால் கூட அதைக் கவனிக்க முடியாமல் போய் விடும். இத்தகைய நிலைமையை அடிப்படையாகக் கொண்டு, ஸாமுவேல் ஸ்பெவாக் என்பவர் ''இரண்டு குருட்டுச் சுண்டெலிகள்'' என்று ஒரு நாடகம் எழுதியிருக்கிறார்.

இரண்டாவது யுத்தம் நடந்தபோது 'விதைகள் காரியாலயம்' என்று ஒரு அரசாங்கக் காரியாலயம் ஏற்பட்டது. அது எங்கேயோ ஒரு சந்தில் உள்ள ஒரு பழைய காலக் கட்டிடத்தில் இருந்தது. யுத்தம் முடிந்ததும் அந்தக் காரியாலயத்தை மூடிவிட்டார்கள். ஆனால் அதற்கான உத்தரவுகள் பிறப்பிக்கப்படவில்லை. ஐந்து வருடங்கள் கழித்தும் காரியாலயம் நடந்து கொண்டிருந்தது. அதில் வேலை செய்தவருக்குச் சம்பளம் பாட்டுக்கு வந்து கொண்டிருந்தது. அவர் இறந்து விட்டார். வேறு குடியிருக்க இடம் கிடைக்காததால் அவர் குடும்பத்தினர் அங்கேயே தொடர்ந்து வசித்து வந்தார்கள். அந்தக் கட்டிடத்தில் அவர்கள் தையல் வகுப்பு, நடன வகுப்பு எல்லாம் நடத்தி வந்தார்கள். திடீரென்று அரசாங்கத்துக்கு அந்தக் கட்டடத்துக்கு வாடகை கொடுத்துக்கொண்டிருப்பது தெரிய வந்தது. வந்து பார்த்தார்கள். அப்போதுதான் வீட்டிலிருந்த பெண் ஓர் அறையில் ஒரு பெண் குழந்தையைப் பெற்றெடுத்திருந்தாள்!

❖

காந்திஜி, ராஜ்கோட்டில் உள்ள ஆல்பர்ட் ஹைஸ்கூலில் படித்தவர். அந்தப் பள்ளிக்கூட மாணவர்கள் அவரது மாணவ வாழ்க்கையைப் பற்றிய போட்டோப் படங்கள் கண்காட்சி ஒன்று நடத்தி வருகிறார்களாம். அவர் மெட்ரிக்குலேஷன் பரீட்சையில் பெற்ற மார்க்குகள் ஜாபிதாவின் போட்டோ ஒன்றிருக்கிறது. மார்க்குகள் விவரம்:

| | | |
|---|---|---|
| ஆங்கிலம் | 200-க்கு | 89 |
| விஞ்ஞானம் | 100க்கு | 45 |
| கணக்கு | 175க்கு | 59 |
| பூகோளம் | 75க்கு | 34 |
| சரித்திரம் | 75க்கு | 20 |

சரித்திரத்தில் மிகக் குறைந்த மார்க்குகள் வாங்கியதனால்தான் காந்திஜி உலக சரித்திரப் பிரசித்தி பெற்றுவிட்டார்.



நீங்கள் அப்படிச் சொல்லமாட்டீர்கள்... ஆனால் அவள் சருமத்தில் களங்கமுள்ளது!

நீங்கள் அப்படி எண்ணமாட்டீர்கள்... ஆனால் இப்பொழுது அக்குறை நீங்கிவிட்டது!

அதைப்பற்றி நீங்கள் அறிந்திருக்க நியாயமில்லை. அத்தனை நுட்பமாக, துல்லியமாக அதை மறைத்திருக்கிறது இலேசான, லாவண்யமான லாக்டோ-காலமைன்! குறை எதுவாயினும் சாமர்த்தியமாக மறைக்கவல்ல மழமழப்பான இப்பவுடர் தளம்...உங்கள் மேனியெழிலுக்கு மேன்மை அளிக்கிறது.

# லாக்டோ-காலமைன் மறைப்பதோடு, குறை நீங்கவும் உதவுகிறது!

ஆம், லாக்டோ-காலமைனின் சாதனை தான், துரிதமாய் வேலை செய்யும், உயர்தர காலமைனிலிருந்து விசேஷமாய்த் தயாரிக்கப்பட்ட இப் பவுடர் மற்றெந்த தினுசுகளையும்விடச் சிறப்பாய் உங்கள் சருமத்துக்குப் பணிபுரிகிறது...குறைகளை மறைப்பதுடன் அவை நீங்கவும் உதவுகிறது. சடுதியில், இதமுடன் தொல்லைகளைத் தீர்க்கிறது லாக்டோ-காலமைன்...நீங்கள் என்றும் விரும்பும் தெளிவான, ஒளி வீசும் மேனியெழிலை அது உங்களுக்கு வழங்குகிறது.

சருமக் கோளாறுகள், வெயில், அனல்காற்று ஆகியவற்றால் கன்றும் சருமம், சிசுக்களுக்கு வரும் அரிப்பு ஆகியவற்றுக்கும் அனுகுணமானது லாக்டோ-காலமைன்.

லாக்டோ-காலமைன் வரிசையில் மேலும் கிடைப்பவை: லோஷன், க்ரீம், டால்கம். எங்கும் கிடைக்கிறது.

**லாக்டோ-காலமைன்—உங்கள் ஒப்பற்ற எழிலின் அடித்தளம்.**




க்ருக்ஸ் இன்டர்ஃரான் லிமிடெட், பம்பாய்-18.

B1-C1-5 TAM.

பவஹாரி என்றால் 'காற்றைப் புசிப்பவர்' என்று பொருள். அது மக்கள் அவருக்கு இட்ட பெயர். பூமிக்கடியில் வசிக்கும் யோகி அவர். எதை உண்டு அவர் ஜீவிக்கிறார் என்றே தெரியாததால் வாயு பக்ஷணம் செய்பவர் என்று மக்கள் அவரை அழைத்து வந்தார்கள்.

இப்படிப்பட்ட ஒரு மகானைப் பார்க்க வேண்டும் என்று ஸ்வாமிஜி விரும்பியதில் வியப்பேதுமில்லையல்லவா?

ஒருவாறாகப் பவஹாரியின் தரிசனம் ஸ்வாமிஜிக்குக் கிட்டிற்று. முதற் பார்வையிலேயே அவர் ஒரு மகா ஞானி எனக் கண்டு கொண்டார் ஸ்வாமிஜி. பாபாஜியும் ஸ்வாமிஜியைக் கண்டதில் மகிழ்ச்சியுற்றார். 'நாஸ்திகம் நிறைந்த உலகில் சத்தியத்தைத் தரிசனம் செய்ய வேண்டுமென்ற தாபத்தோடு ஒரு பிள்ளை இப்படி அலைகிறதே!' என்று அவர் மகிழ்ந்திருக்க மாட்டாரா?

பாபாஜியைக் கண்டபின்பு ஸ்வாமிஜி கடினமான அப்பியாசங்களைப் புரியலானார். உடல் நலிவுற்றது. பிரதி தினமும் பாபாஜியிடம் சென்று அருளைப் பிரார்த்தித்தார். பாபாஜி பணிவு நிலையமாக விளங்கியவர். எனவே ஸ்வாமிஜி ஞானோபதேசம் புரியுமாறு வேண்டும் போதெல்லாம் அவர், ''தாஸனுக்கு என்ன தெரியும்?'' என்றே கூறுவார். என்றாலும் சம்பாஷணை தொடர்ந்தால் அங்கே ஞானம் பளிச்சுப் பளிச்சென்று மின்வெட்டும்.

ஸ்வாமிஜிக்குக் கடும் இடுப்புப் பிடிப்பு உண்டாயிற்று. சொல்லி முடியாத உபாதி யுறும்போதெல்லாம் அவர் பவஹாரி பாபாவை நினைத்துக் கொள்வார். 'அவர் எப்படி இன்னல்கள் யாவற்றையும் சகித்துக் கொள்கிறார்?' என்றெண்ணி வியப்பார்.

ஸ்வாமிஜி தமது உடல் நலக் குறைவையேனும் ஒருவாறு மறந்திருக்க முடிந்தது. ஆனால் ஹ்ருஷீகேசத்தில் அபேதாநந்தர் மலேரியாக் காய்ச்சலில் கஷ்டப்படுகிறார் என்பது ஸ்வாமிஜியை மிகவும் நொந்து போக வைத்தது.

''இதெல்லாம் உங்களுக்குச் சிரிப்பாக இருக்கலாம்'' என்று பிரமத தாஸ

54





# அறிவுக் கனலே, அருட் புனலே

ரா. கணபதி

ருக்கு எழுதுகிறார் ஸ்வாமிஜி. "கடுமையான வேதாந்தக் கருத்துக்களைக் கொண்டிருந்தபோதிலும் நான் மிகவும் மிருதுவான இயல்பு படைத்தவன். ஆத்ம லாபம் பெற வேண்டும் என்பதற்காக என்னைப் பற்றி மட்டுமே எண்ணுவதற்கு நான் என்னதான் பிரயத்தனம் செய்தாலும், என்னையும் மீறி நானாகப் பிறரது நலன்களைச் சிந்திக்கத் தொடங்கி விடுகிறேன்."

நமக்கும் ஸ்வாமிஜிக்கும் மலைக்கும் மடுவுக்குமாக அல்லவா இருக்கிறது! நம்மை மையமாக வைத்தேதான் நம்மால் வாழ முடிகிறது. பிறரை மையமாக வைத்தேதான் அவரால் வாழ முடிந்திருக்கிறது.

சஞ்சலங்கள் இல்லாமல் வாழுவதெப்படி என்று தீவிரமாக எண்ணலானார் ஸ்வாமிஜி. இன்னல்களின் போதும் சமநிலை குலையாத யோகத்தைப் பவஹாரி பாபா தமக்குக் கற்பிக்கக்கூடும் என்று நினைத்தார். கற்பிக்க வேண்டும் என்றே விரும்பலானார்.

போதனை பெறுவதற்காகவே மீண்டும் மீண்டும் பாபாஜியிடம் கால் தேய நடந்தார் ஸ்வாமிஜி. அவரோ உபதேசிக்கவே காணோம்!

பாபா ஏன் தமக்கு ராஜ யோகம் கற்பிக்கிறாரில்லை என்று யோசித்துப் பார்த்தார் ஸ்வாமிஜி. ஒரு நாள் படுக்கையில் புரண்டபடி இதனையே சிந்தித்துக் கொண்டிருந்தார்.

பாபாவையே குருவாக அடைந்து தீக்ஷை அளிக்கச் சொன்னால் கற்பிப்பாரோ என்று கூட எண்ணிவிட்டார்.

அந்த எண்ணம் அவருக்குத் தோன்றியதுதான் தாமதம். வாசற்படியருகே ஓர் உருவம் தெரிந்தது.

ஆஹா, யார் அது!

அவரா?

அவரேதானா?

திகைத்துப் போனார் ஸ்வாமிஜி.

அது ஆனந்தத் திகைப்பா? அவமானத் திகைப்பா?

நாலாண்டுகளுக்கு முன் மறைந்த நல்ல குருநாதனின் திரு உருவம் அல்லவா அது!

நாலாண்டுக்குப் பின் அவரைக் கண்டோமே என்பதில் ஸ்வாமிஜிக்கு ஆனந்தம் மட்டும் பீறிட்டுக் கொண்டு வரவில்லை. அவமானமும் வந்தது. குருநாதர் ஐம்பதாண்டுகளில் பெற்றிருந்த அநுபவ வெள்ளத்தையெல்லாம் ஐந்தாண்டில் தம்முள் பாய்ச்சியதையும், அதற்கும் மேலாக ஐம்பதாயிரம் யுகங்களிலும் பொழிய முடியாத அன்பைத் தம் மேல் பொழிந்ததையும் எண்ணிக் கரைந்தார் ஸ்வாமிஜி. தாம் தேடித் தேடிச் சென்றும் ஞானோபதேசம் செய்யாதவர்கள் ஒரு புறம் இருக்கட்டும். அவரோ தம்மைத் தேடித் தேடி வந்தல்லவா தமது ஐயங்களைத் தீர்த்தார்? பக்தியைக் கேலி செய்த தம்மைப் பக்தனாக்கினார்? அத்வைதத்தைப் பரிகாசம் செய்த தமக்கு நிர்விகல்ப அத்வைத சமாதி நிலையை அருளினார்? பிறகு அதற்கும் மேலான லோகசேவைக்காக அத்வைதாநுபூதியையும் தம்மிடமிருந்து எடுத்துப் பூட்டி வைத்துக் கொண்டார்? அப்படிப்பட்டவரை ஆசாரியனாக வரித்த உள்ளத்தில் இன்னொருவருக்குக் குரு பீடம் போடுவதாவது?

கதவண்டை நின்ற பகவான் ராமகிருஷ்ணர் ஸ்வாமிஜியின் கண்களினுள்ளே உற்று நோக்கினார். ஒரு பேச்சும் பேசாமல் நிலைத்துப் பார்த்துக் கொண்டேயிருந்தார். அந்தத் தீட்சண்யத்தை ஸ்வாமிஜியால் தாங்கவே முடியவில்லை.

அப்போது அவர் எப்படி உணர்ந்திருப்பார் என்று நாம் எவ்வாறு சொல்ல முடியும்? வேற்று மனிதரிடம் மனைவிக்கு மனசு திரும்பியுள்ளது என்றறிந்த கணவன் அவளை நோக்கும் போது அவள் எப்படி உணர்வாளோ அப்படி உணர்ந்திருக்கக் கூடும்.

கடைசியில் அவமானம் போய் அன்பு மட்டுமே நின்றது; பச்சாத்தாபம் போய், பாசம் மட்டுமே நின்றது. நரேந்திரரை மீண்டும் வலிய ஆட்கொண்டார் பரமஹம்ஸ ராமகிருஷ்ணர்.

எந்த உள்ளத் தெளிவை வேண்டி ஸ்வாமிஜி பவஹாரியைத் தனிப் பெரும் குருவாக அடைய எண்ணினாரோ அந்த மனச்சாந்தியை பகவான் ராமகிருஷ்ணரின் கிருபையில் இப்போது உடனே பெற்றுவிட்டார்.

ஸ்வாமிஜியின் அப்போதைய மனோபாவத்தை அவர் பிற்பாடு ஒரு மனோஹரமான பாவாக அளித்தார்:

பாட்டொன்று பாடுகின்றேன்;
பாட்டொன்று பாடுகிறேன் உனக்கென்றே நான்
கேட்பவர் களித்தாலும் கேலி புரிந்தாலும்
கருத்தில்லை என்றே நான் கானம் செய்கிறேன்.
எந்தன் பின்னணியில்நீ எப்போதும் நிற்கிறாய்
சஞ்சலமில்லாமல் தஞ்சமாய் நிற்கிறாய்
திரும்புமிடமெல்லாம் திருமுகம் காண்கிறேன்
திருமுக மதனிலே குறுநகை காண்கிறேன்
கண்டவுடன் பாடுகிறேன் பாட்டொன்று நான்
ஒன்று பலவாய்ப் பெருகப் பாடுகிறேன்.

கருணைப் பெருங்கடலே, கல்பாந்த காலமாய்
கழலிணைத் தொழும்புசெய் கடையவன்நான்
விளங்குவதில்லை உந்தன் வழிமுறைகள்
விளங்குவதில்லை எந்தன் விதிஎழுத்தும்
விளக்கம் பெறவும் நான்விரும்பவில்லை.
பக்தியும் முக்தியும் ஜபதப சாதனையும்
போகமும் பூஜையும் பிறவும் உந்தன்
உன்னத ஆணையில் ஒதுக்கிவிட்டேன்
உள்ளது ஒரே ஆசை, உரைத்திடுவேன்:
உன் அன்பில் கரைந்திடவே ஆசைகொண்டேன்.

விளையாட்டு செய்கின்ற இளையோர்போல
வினையேன் உனைச்சினந்து வெகுண்டெழுந்தேன்;
விட்டுப் பிரிந்து உன்னை விலக்கி வைத்து
வெகுதூரம் விரைவாக வெளியேறினேன்

கனாந்தகாரமான வனாந்தரமதனில்
வழிதெரியாமல் நான் விழித்திடும்போது
வந்து நீ நிற்கிறாய் எந்தன் முன்னால்!
பேசாத அதரங்கள் படபடக்க
பொழிகின்ற நயனங்கள் பொலபொலக்க
வந்து நீ நிற்கிறாய் எந்தன் முன்னால்!
இனித்த உன் வதனத்தை என்முயருகே
குனிந்து நீ பார்க்கிறாய் குளிர்ச்சியுடன்
அந்தக்கணமே உன் அன்புக்கு ஆட்பட்டேன்
அண்டி அடியிணையை மண்டியிட்டேன்.

மன்னிப்பு ஏதும் நான் கோருவதில்லை,
மகனிடம் மனஸ்தாபம் உனக்கு உண்டோ?
மடமைகள் எத்தனை நான் புரிவதற்கும்
மனிதர் யார் உன்னையன்றி மூவுலகிலும்?

ஃ ஃ ஃ

ஸ்வாமிஜி மீண்டும் வாரணாசி சென்றார். பிரமததாஸரின் தோப்பிலேயே அன்வரதமும் தியானமும், யோகமும் செய்து அமைதியில் ஆழ்ந்து வந்தார்.

மீண்டும் ஒரு சூறாவளி வீசி ஸ்வாமிஜியின் உணர்ச்சியைக் கொந்தளிக்கச் செய்தது. குருநாதரின் கிருஹஸ்த சிஷ்யர்களில் சிறந்தவராக விளங்கிய பலராம போஸின் உடல்நிலை கவலைக்கிடமாக இருப்பதாகச் செய்திவந்தது. அவரினும் சிறந்த சிஷ்யரும், குருபாயிக்களின் ஆதரவாளருமான சுரேந்திரநாத மித்ரா செத்துக் கொண்டேயிருக்கிறார் என்ற செய்தியும் வந்தது. மிகவும் கலக்கமடைந்துவிட்டார் ஸ்வாமிஜி. வாரணாசியிலிருந்து புறப்பட்டு வரநகரம் வந்து சேர்ந்தார்.

1890ம் ஆண்டு மே 13ந் தேதி பலராம போஸ் குருநாதரின் பாத கமலத்தை அடைந்தார். அதே மாதம் 25ந் தேதி சுரேந்திர நாதரும் குருமஹராஜில் ஐக்கியமானார்.

ஸ்வாமிஜி தம்மைக் கல்லாக்கிக் கொண்டார்.

வர நகரத்தில் முன்போல் செயல் துடிப்புக் கொண்டு விளங்கிய ஸ்வாமிஜி சிறிது காலத்திலேயே மக்கள் கண்ணில் படாமல் வாழும் ஏகாந்த வாழ்க்கையை எண்ணலானார். இவ்வாறு அவர் அடிக்கடி தனிமைக்கும் சங்கத்துக்குமிடையே, தியானத்துக்கும் சேவைக்குமிடையே, செயலுக்கும் சிந்தனைக்குமிடையே மாறி மாறிப் பாய்ந்தது வாசகர்களுக்கு விசித்திரமாகக் கூடப்படலாம். ஆனால் சந்திரன் பூரண கலைகளுடன் நிறைந்ததும் மீண்டும் குறையத்தானே தொடங்குகிறான்? அதே போலப் பூரணமாகத் தேய்ந்ததும் மீண்டும் வளரத்தானே தொடங்குகிறான்? அதே போல எந்த ஒரு துறையிலும் ஸ்வாமிஜியின் நாட்டம் பூரண வேகத்துடன் பதிந்தவுடன் அது தன்னையும் அறியாமல் எதிர்த் திசையில் செல்லத் தொடங்கிற்று.

ஸ்வாமிஜி இமயத்தில் யாத்திரை செய்யத் தீர்மானம் செய்து கொண்டார். ''ஒரு போதும் வரநகரத்துக்குத் திரும்பக் கூடாது'' என்று மனத்துக்குள் சொல்லிக் கொண்டார்.

உடன் இருந்தவர்களிடம், ''என்னுடைய ஸ்பரிச மாத்திரத்தில் மனிதனை மாற்றும் அளவுக்கு அநுபவம் பெறுமுன் நான் திரும்ப மாட்டேன்'' என்று கூறினார்.

ஸ்பரிச மாத்திரத்தில் தம்மைப் பேரின்ப நிலத்துக்குக் கொத்திச் சென்ற குருமஹராஜை நினைந்து இவ்வாறு கூறினாரோ, என்னவோ?

ஃ ஃ ஃ

கல்கத்தாவிலிருந்து ஹிமாசலம் புறப்படுமுன் கங்கைக்கு அப்பாலுள்ள குஸுரி என்ற கிராமத்துக்குச் சென்றார் ஸ்வாமிஜி.

தூய அன்னை சாரதை அங்குதான் அப்போது வசித்து வந்தாள்.

அன்று போலவே இன்றும் இருந்தாள் அவள். மகா ஞானியாகவோ, மகா பக்தையாகவோ, மகா யோகினியாகவோ வெளிப் பார்வைக்கு அவள் இல்லை. ஆனால் இவை எல்லாவற்றையும் பெற்றும் அவற்றை எளிமையால் மறைத்து வைப்பவளாக இருந்தாள். அதாவது பெண்ணாக இருந்தாள். அன்னையாக இருந்தாள்.

புனிதவதியை வணங்கினார் ஸ்வாமிஜி.

''அம்மா, நான் இமயமலை போகிறேன். ஞானத்தின் உயர்நிலையைப் பெற்றாலன்றி அங்கிருந்து திரும்ப மாட்டேன். ஆசி கூறி அனுப்பு'' என்றார் பணிவு மயமாக.

குருநாதரின் பெயரில் குழந்தையை ஆசீர்வதித்தாள் சாரதை.

G. P




மைத்தான் ஏ.வி., பாக்ரா டி.வி 900 மி.மீ, 1200 மி.மீ, 1400 மி.மீ, 1500 மி.மீ.



டிலக்ஸ் 400 மி.மீ மேஜை மாடல்

- சுழட்டக்கூடிய ஸ்விட்சுடன்
- இஷ்டமான கோணத்தில் பொருத்தி, இருபுறமும் திரும்பி வீசக்கூடியது.
- மிகச்சரியான வடிவமும் சம நிலையுமுள்ள அலுமினியம் பிளேடுகள்
- முழுமையான வேகம்
- ஒரு சில நிறங்களில் எனாமல் பூச்சு.

# AEI

# ஸீலிங்
## மற்றும்
# டேபிள் விசிறிகள்

தேர்ந்தெடுத்த பாகங்களைக் கொண்டு, துல்லியமான திறமையுடன் தயாராகும் ஏஇஐ ஸீலிங் மற்றும் டேபிள்மின்சாரவிசிறிகளுக்கு அனுபவமும், தொழில் நுணுக்க அறிவும்தான் ஆதாரமானவை. அதி விசை ஓட்டத்திற்கும், குறைந்த மின்சார உபயோகத்திற்கும் — ஏஇஐ என்று குறிப்பிட்டுக் கேட்கவும்.

அசோஸியேடட் எலக்ட்ரிகல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) பிரை. லிட்.
பிரென் ஹவுஸ்: 13, ராஜேந்திரநாத் முகர்ஜி ரோடு, கல்கத்தா-1.
கிளைகள்: பம்பாய் - புதுடில்லி - மதராஸ் - பெங்களூர் - கோயமுத்தூர் - நாகபுரி.

AEI-47A TAM

"என் மகனே, புறப்படுமுன் உன்னைப் பெற்ற அம்மாளைக் காண்பாயல்லவா?" என்றாள் — ஒரு பெண் மட்டுமே மற்றொரு பெண்ணிடம் காட்டக் கூடிய அநுதாபத்துடன்.

அன்பு பொலிய அவளை நோக்கினார் ஸ்வாமிஜி.

"அம்மா? அம்மாவாவது? நீ ஒருத்திதான் என் அம்மா" என்றார்.

ஸ்வாமிஜிக்கு மீண்டும் ஆசி கூறினாள் சாரதை.

கல்கத்தாவிலிருந்து அகண்டானந்தருடன் புறப்பட்டார் ஸ்வாமிஜி. இந்தப் பயணத்தில் முதன் முதலாகச் சேர்ந்தாற் போல் அவர்கள் சில தினங்கள் தங்கியது பகல்பூரில். ஸ்வாமிஜிக்கும் அகண்டானந்தருக்கும் பகல்பூரில் இடம் அளித்த மன்மதநாதர் முதலில் அவர்களைப் படிப்பு வாசனையற்ற சாதாரணப் பரதேசிகள் என்றே எண்ணினார். போஜனம் முடிந்தபின் பௌத்தத்தைப் பற்றிய ஓர் ஆங்கில நூலைப் படிக்கலானார் மன்மதர்.

ஸ்வாமிஜிக்குத்தான் பௌத்தத்தில் தனி ஆர்வம் ஆயிற்றே! எனவே, அவர் அந்த நூலைப் பற்றி விசாரிக்கலானார். அதன் தலைப்பை மட்டும் கூறிய மன்மதர், "உங்களுக்கு இங்கிலீஷ் தெரியுமா?" என்று ஸ்வாமிஜியைக் கேட்டார். "ஏதோ கொஞ்சம் புரியும்" என்றார் ஸ்வாமிஜி. பாமரர் போல் அடங்கி வாழ வேண்டும் என்ற அவரது நீண்ட நாளைய ஆர்வமே அவரை இப்படிப் பேசத் தூண்டியிருக்க வேண்டும்.

பௌத்த மதம் பற்றிப் பேசலானார் மன்மதர். உடனே தம்மையும் மீறிப் பௌத்த தத்துவங்களை ஸ்வாமிஜி ஆங்கிலத்தில் விளக்கலானார்.

இன்னொரு நாள் இப்படித்தான் ஏதோ பேச்சுவாக்கில் ஸ்வாமிஜி யோக சாதனை ஏதேனும் புரிந்து வருகிறாரா என்று கேட்டார் மன்மதர். ஸ்வாமிஜி உடனே தமது ஒவ்வொரு நரம்பிலும் ராஜயோகம் ததும்புவதைக் காட்டுவது போல அந்த சாஸ்திரத்தைக் கவினுற விளக்கத் தொடங்கினார்.

ஸ்வாமிஜியின் சம்ஸ்கிருத ஞானத்தைப் பற்றி அறிய வேண்டுமென்று ஒரு நாள் ஆவல் கொண்டார் மன்மதர். உபநிஷதங்களில் ஸ்வாமிஜியைப் பல கேள்விகள் கேட்டார். பளிச்சுப் பளிச்சென்று ஸ்வாமிஜி விடை கூறினார். மறைகள் யாவற்றையும் தம்முன்னே அவர் மறைத்து வைத்திருக்கிறார் என்பதைக் கண்டார் மன்மதர்.

## மூடிய வாயில்

மேற்கு பெர்லினையே நிரந்தர வாசஸ்தலமாகக் கொள்ள விரும்பி, கம்யூனிஸத் தளைகளை உதறி விட்டுக் கிழக்கு பெர்லினிலிருந்து தப்பி வந்தவர்களின் எண்ணிக்கை நாற்பது லட்சமாக உயர்ந்ததும் கம்யூனிஸ ஆட்சி இதனைக் கௌரவக் குறைவாக எண்ணியதில் வியப்பில்லை. நீண்டு உயர்ந்த சுவரைத் தவிர முள்வேலிகளும் போட்டு அவற்றுக்கு முன்னால் காவலாளிகளையும் நிறுத்தி யாரும் மேற்கு பெர்லினுக்குப் போகாதவாறு தடுத்தனர். எனினும் சுதந்திர ஆர்வம் பலரைத் துணிச்சலுடன் கட்டுக் காவல்களைக் கடக்க வைத்தது. இம்முயற்சியில் இறந்தவர் பலர்.

மதிலெழுப்பி மக்களைச் சிறைப்படுத்திய பிறகு அவர்களுடைய உறவினர்கள் கிறிஸ்துமஸ் சமயத்தில் மட்டும் கிழக்கு பெர்லினுக்கு வந்து போக, சென்ற வருஷம் அனுமதி அளித்தது கம்யூனிஸ அரசாங்கம். சுவரில் ஒரு வாயிலை உருவாக்கியது. இதன் முன் மைல் கணக்கில் 'க்யூ' வரிசைகள் நின்றன!

பண்டிகை முடிந்து அனைவரும் திரும்பியதும் வாயில் மீண்டும் அடைக்கப்பட்டு விட்டது. மனத்தால் ஒன்றுபட்ட பெர்லின் மக்கள் ஒரு சுவர் காரணமாகப் பிளவுபட்டு நிற்கிறார்கள். ஒரே ஜெர்மனி என்கிற அவர்கள் விருப்பம் என்று நிறைவேறுமோ?



பிறிதொரு நாள் ஸ்வாமிஜி ஏதோ பாடலைத் தமக்குள்ளே முனகிக்கொண்டிருக்க அதனை அகஸ்மாத்தாகக் கேட்டு விட்டார் மன்மதர். ''உங்களுக்குப் பாடத் தெரியுமா?'' என்று ஸ்வாமிஜியை அவர் கேட்டார். ''ஏதோ அற்ப சொற்பமாகத் தெரியும்'' என்றார் ஸ்வாமிஜி. அவர் அற்பம் என்பது எப்படி உண்மையில் அனந்தமாக இருக்கிறது என்பதைத்தான் மன்மதர் கண்டு விட்டாரே! எனவே அவரைப் பாடுமாறு வற்புறுத்தினார். எப்போதும் போலவே இப்போதும் பெரும் பயன் அடைந்தார்.

மறு நாள் மாலை உஸ்தாதுக்கள் பலர் உள்ளிட்ட ரசிகர்களைத் தமது வீட்டுக்கு வரவழைத்து ஸ்வாமிஜியைப் பாடச் செய்தார் மன்மதர். ஸ்வாமிஜி தங்கு தடையின்றி, கங்கு கரையின்றி, கன மழையாகக் கானமழை பொழிந்து கொண்டேயிருந்தார். மணி ஒன்பதாகி, பத்து ஆகி, பதினொன்றுமாகி, பன்னிரண்டையும் கடந்து ஒன்று, இரண்டு என்று ஓடியது. மூன்றாவது மணி நெருங்கும்போதுதான் ஸ்வாமிஜி இசையுலகிலிருந்து இக உலகுக்கு வந்தார். மற்றவர்களும் அப்போதுதான் இக உலகுக்கு வந்தனர்.

பகல்பூரிலிருந்து கிளம்பிய ஸ்வாமிஜியும் அகண்டானந்தரும் வைத்திய நாதத்தை அடைந்தனர். பிரம்ம சமாஜத் தலைவரான பாபு ராஜ நாராயண போஸ் என்பவரைக் காணச் சென்றனர்.

தாம் ஆங்கிலம் பயின்றவர் என்று கூறக் கூடாது என்று அகண்டானந்தரிடம் ஸ்வாமிஜி கூறியிருந்தார். 'கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் களிப்பே' என்பதாகக் கல்லாதவருக்கே முதலிடம் தந்து வள்ளல் பாடினாரல்லவா? கல்விமான் தனது கல்வியோடு, அந்தக் கல்வியைத்தான் கற்றிருக்கிறோம் என்ற செருக்கையும் அல்லவா பெற்றிருக்கிறான்? கல்லாதவனின் எளிமையையே ஸ்வாமிஜி நாடினார்.

ராஜ நாராயண பாபுவை ஸ்வாமிஜி சந்தித்தபோது பல வேடிக்கைகள் நிகழ்ந்தன.

எவ்வாறோ சம்பாஷணை நெருடலான விஷயங்களில் சென்று விட்டது. அந்தத் தத்துவ விவாதத்தின் போது ஸ்வாமிஜியின் தொண்டை வரையில் ஆங்கில வார்த்தைகள் வந்து விடும். எப்படியோ சமாளித்துக் கொண்டு விடுவார். 'ப்ளஸ்' போன்ற வார்த்தைகளை வங்காளியிலும் கூற முடியாமல் தவித்தார் ஸ்வாமிஜி. விரலால் குறி போட்டுக் காட்டியே இந்தத் தவிப்பை ஒருவாறு போக்கிக் கொண்டார். ராஜ நாராயண பாபு அவருக்கு ஆங்கில அரிச்சுவடிகூடத் தெரிந்திராது என்றேதான் எண்ணியிருப்பார்.

பல ஆண்டுகளுக்குப் பின்பு உலக அரங்கிலே ஆங்கில மொழியில் அதி நுண்ணிய வேதாந்தக் கருத்துக்களைச் சக்கைப்போடு போட்ட விவேகானந்தர் தான் தாம் கண்ட ஸ்வாமிஜி என்றறிந்த போது ராஜ நாராயணர் கொண்ட வியப்புக்கு ஓர் அளவேயில்லை.

ஸ்வாமிஜியும் அகண்டானந்தரும் மறுபடியும் காசியை அடைந்தனர்.

அங்கிருந்து கிளம்புகையில், ''அடுத்த முறை நான் இங்கு வரும்போது பீரங்கிக் குண்டு போலச் சமூகத்தின் மீது வெடிப்பேன்; அது நாய்போல என்னைத் தொடரும்'' என்றார் ஸ்வாமிஜி. அது நூற்றுக்கு நூறு பலித்ததைப் பின்னால் காண்போம்.

தொன்மை வாய்ந்த தவக் களஞ்சியமாகிய பதரிகாசிரமம்தான் அவர்களுடைய லட்சியமாக இருந்தது. கால் நடையாகவே முழு யாத்திரையும் முடிப்பது, காசைக் கையாலும் தீண்டாமலிருப்பது என்ற கடுமையான நிபந்தனைகளுடன் பயணம் தொடங்கினர்.

இமயத்தின் மடியிலேயுள்ள அல்மோராவைச் சென்றடைந்தனர்.

அல்மோராவில் இருக்கும் போது மிகவும் துக்ககரமான ஒரு சேதி ஸ்வாமிஜிக்கு எட்டியது. அவருடைய சோதரிகளில் ஒருத்தி தற்கொலை செய்து கொண்டு விட்டாள் என்பதே அது. தமது துயரத்திலேயே, இந்தியப் பெண் குலத்துக்கெல்லாம் பொதுவானபிரச்னைகளைக் கண்டு இருவிதத்திலும் மனசு நொந்தார் ஸ்வாமிஜி. பாரதப் பெண்களின் விமோசனத்துக்குப் பாடுபடத் துடித்தார்.

எப்போதுமே உலக சேவைக்காக அவர் துடித்தவுடன் ஏகாந்த வாழ்வுக்குச் சென்றதைத்தான் நாம் கண்டிருக்கிறோமே! அதற்கேற்ப இப்போதும், மனிதர்கள் செல்ல முடியாத இமய மலைப் பகுதிகளுக்குள் செல்ல வேண்டும்; பிரகிருதியின் கடுமைகளையும், கொடுமைகளையும் கண்டு அநுபவிக்க வேண்டும் என்ற விருப்பம் ஸ்வாமிஜிக்குள் தலைதூக்கியது. புறப்பட்டார்.

அகண்டானந்தருக்கும் ஸ்வாமிஜிக்கும் வழியெல்லாம் ஜுரம் வருவதும் தணிவதுமாக இருந்தது. இருவரும் ஒருவாறு உடம்பு குணமாகி ருத்ரப் பிரயாகையை அடைந்தனர்.

ருத்ரப் பிரயாகையின் ரமணீயம் ஸ்வாமிஜியைக் குழந்தை போலக் குதூகலிக்க வைத்தது. இமயமலையின் கம்பீரத்தை வைத்து அதனைத் தேவிக்கும் தந்தை என்கிறோம். ஆனால் இங்கோ ஹிமவான் காட்சியில் புலனாகும் தொலைவில் ஒரு பெரிய குழந்தையாகவே துவண்டு கொண்டிருந்தான். பனிக்காகக் குழந்தைகளுக்கு நாம் குல்லாய் போடுகிறோம் என்றால் இங்கே இமயக் குழந்தை பனியையே குல்லாயாகப் போட்டுக் கொண்டிருந்தது. ரசிக உள்ளம் பெற்ற ஸ்வாமிஜி பேரானந்தமடைந்தார்.

அங்கிருந்து கிளம்பினர். ஒரு நாளில் பல மைல்கள் கடினமான வழியில் பிரயாணம் செய்தனர். ஸ்ரீநகரத்தைச் சென்றடைந்தனர். மற்ற சில குருபாயிகளும் அங்கு சேர்ந்து கொண்டனர். சுமார் ஒரு மாதகாலம் எல்லோரும் அலகநந்தா நதியின் கரையில் ஓர் ஏகாந்தமான குடிலில் தங்கினர்.

'மாதுகரி பிக்ஷை' என்பதாக ஒன்று உண்டு. மதுகரம் என்றால் தேன் வண்டு. வண்டு பல புஷ்பங்களில் உள்ள மதுவைச் சேகரிப்பது போல, பல வீடுகளில் உணவு இரந்து பெற்று உண்பதே மாதுகரி பிக்ஷை. இப்படிப் பிச்சை எடுத்தே ஸ்வாமிஜியும் குருபாயிக்களும் உண்டனர். யாருக்கும் பாரமாக இராமல் சமூகம் முழுவதற்கும் தான பாக்கியத்தை அளித்து வந்தனர். துறவிகளுக்கே உரிய தூய முறையில் நாட்கள் சென்றன.

அகண்டானந்தருக்கு இமய சீதோஷ்ணம் சிறிதும் ஒத்துவரவில்லை: ஸ்வாமிஜிக்கும் சீதளம் தாள முடியவில்லை. டேராடன் வந்து சேர்ந்தார்.

அகண்டாநந்தருக்கு ஒரு காப்பான இடம் தேடி டேராடனில் அலைந்தார் ஸ்வாமிஜி. பல வீட்டுப் படிகள் ஏறி யிறங்கித் தமது குருபாயி உடலை நீட்டிப் படுக்க இருக்கையும், ஒருவாய் கஞ்சியும் யாசித்தார். இதைப் படிக்கும்போது நம் நெஞ்சு நோகிறது. அவரும் அந்தக் குருபாயிக்களும் சரிவரப் படிப்பைப் பூர்த்தி செய்திருந்தால் இப்போது கை நிறையச் சம்பாதித்திருக்கலாம்: ஒரு நோய் நொடி என்றால் ராஜ வைத்தியம் செய்து கொண்டிருக்கலாம். அதெல்லாம் வேண்டாமென்று ஏன் இப்படி அநாதைப் பரதேசிகளாகக் கிளம்பி விட்டார்கள்?

கடைசியில் நோயாளியை ரட்சிக்க ஒருவர் கிடைத்தார். டேராடனில் மூன்று வாரங்களிருந்த பின், குண



போட்டோ எடுப்பவர்: போட்டோ எடுப்பதற்கு நம்முடைய 'ரேட்டை' ஏனய்யா அவரிடம் முன்கூட்டியே சொல்லித் தொலைத்தீர்? கொஞ்சம் சிரியுங்க என்று எவ்வளவு தரம் சொன்னாலும் சிரிக்க மாட்டேங்கறாரே!

மடைந்து வந்த அகண்டாநந்தரை அலஹாபாத்தில் ஒரு நண்பர் வீட்டுக்குப் போகுமாறு பணித்து, மற்றவரோடு ஸ்வாமிஜி ஹ்ருஷிகேசம் கிளம்பினார். சண்டேச்வர மகாதேவன் என்று வாய் நிறைந்த அழகுத் திருநாமத்துடன் விளங்கும் பெருமானுடைய மந்திரத்தருகே ஒரு பர்ணசாலையில் ஸ்வாமிஜியும், குருபாயிக்களும் தங்கினர். வயிற்றுப் பாட்டுக்கு மாதுகரி பிக்ஷை இருக்கவே இருந்தது. மிகவும் தீவிரமான சாதனைகளை மேற்கொள்ள ஆவல்கொண்டார் ஸ்வாமிஜி. ஆனால் பாழாய்ப் போன விதி இப்பொழுதும் அவரைப் படுக்கையில் கிடத்திவிட்டது. ஜுரம் முற்றி அவருக்கு ஜன்னியே பிறந்து விட்டது. பிரக்ஞையும் தப்பத் தொடங்கியது. நாடிகூடத் தளர்ந்து விட்டது. கடும் பனியாக ஈரம் காக்கும் வெறும் தரையில் இரண்டே இரண்டு முரட்டுப் போர்வைகளைப் போட்டுக் கொண்டு அதன்மீது செங்கற்சூளையாக உடம்பு கொதிக்கப் படுத்திருந்தார் புவநேசுவரி அருமைக்கிட்டு வளர்த்த செல்வர் குடிப் பிள்ளை. அவரை அந்நிலையில் காணக் காண குருபாயிக்களுக்குத் தாங்க முடியாத துயரமும் அச்சமும் உண்டாயின. துயரும், அச்சமும் தீர்க்கும் தேவதூதன்போல் மலைவாசி ஒருவன் அங்கு வந்து சேர்ந்தான். ஏதோ ஓர் ஔஷதத்தை தேனில் குழைத்து ஸ்வாமிஜியின் வாய்க்குள் நிர்ப்பந்தமாக அதைச் செலுத்தினன். ஆண்டவன் கிருபையால் ஸ்வாமிஜி கண் திறந்தார். (தொடரும்)

# பிரிட்டானியா க்ளாக்ஸோ



## பிரிட்டானியா பிஸ்கட்டுகள்





தி பிரிட்டானியா பிஸ்கட் கம்பெனி லிமிடெட்



# பாசமும் நேசமும்

சாந்தி பணக்காரப் பெண்: ஓவியனான ராஜா ஏழை. அநாதை. ஒரு கிறிஸ்தவ மூதாட்டியின் வீட்டில் தங்கி வேலை தேடுகிறான். பணக்கார யுவதியின் காதல் கிடைத்தபோது கிறிஸ்தவ மூதாட்டியின் சொத்து முழுவதும் கிடைத்து விடுகிறது. அந்த அம்மாள் ஜுரத்துக்காகச் சாப்பிட்ட மருந்து அவன் பிராணனை வாங்கி விடுகிறது. (நம் பிராணனையும்தான்!) பிறகு நீதிமன்றம், விசாரணை. கடைசியில் சுபம்!

'ஏழை பங்காளன்' ஜெமினி கணேசன் இதில் கூடவே அப்பாவித்தனத்தையும் கலந்து கொள்கிறார். காதல் காட்சியில்கூட அந்த அசட்டுப்பார்வையைக் கைவிடாமல் நன்றாய் நடிக்கிறார். ஆயிரம் ரூபாய் நோட்டைப் பார்த்து அதிசயப்படும் இடம், சாந்தியைச் சந்தித்ததிலிருந்து அவளிடம் பேசிய சந்தர்ப்பங்கள் ஆகிய எல்லாக் கட்டங்களையும் நினைவில் வைத்துக் கொள்ளச் செய்து விட்டார். (ஆனால் கதையே அசடு வழியும்போது கதாபாத்திரங்கள் வேறு தனியாக அசடு வழிய வேண்டுமா என்று கேட்காதீர்கள்!)

சரோஜா தேவிக்கு அதிகச் சிரமமில்லை. கவர்ச்சியாகத் தோன்றிச் சைக்கிள் சவாரி செய்து, காதல் களியாட்டங்கள் ஆடி, காதலனிடம் ஏழையாக நடித்துக் கடைசியில் படத்தைச் சுபமாக முடித்து வைக்கிறார். கண் கலங்கச் சந்தர்ப்பமே இல்லை. சரோஜா தேவியும், சந்திரகாந்தாவும் ஆண் மாறுட்டம் செய்து கொட்டம் அடிக்கும் காட்சி நம்ப முடியாததாயிருந்தாலும் அந்தக் காட்சி மட்டும் இல்லையென்றால் படத்தில் ரசிக்க ஒன்றுமே இல்லையே!

எம். வி. ராஜம்மா மேரியம்மா. கண்டிப்பு, கறார் — இவற்றுக்கு இடையில் பாசம் — நேசம் இவற்றையெல்லாம் வெளிப்படுத்த முயன்றிருக்கிறார். "இது சத்தியம்" படத்தில் வந்த கண்ணம்பாவின் ஜாடை காட்டினாலும் அவர் நடிப்புக்கு ஈடாகக் கூற முடியாது. மேரியம்மா ராஜாவோடு சென்று 'ராக் அண்ட் ரோல்' நடனத்தைப் பார்த்து ரசிக்கும் கட்டத்தை நம்மால் ரசிக்க முடியவில்லை. ஏசுநாதரிடம் பரம விசுவாசம் கொண்டு விளங்கும் ஒரு தமிழ் நாட்டு மூதாட்டி இந்தக் கண்ணாவி நடனத்தைக் கண்டு மகிழ்வதாகக் காட்டியிருக்க வேண்டாம்.

'ராக் அண்ட் ரோல்' நமக்குத் தேவையேயில்லை. மேற்படி நடனத்துக்கு ஏற்ற உடலமைப்பைப் பெற்றவர்கள் மேல்நாட்டு நடன நங்கைகள்தான். இதைச் சிறிதும் யோசியாமல் கவுனை மாட்டிக் கொண்டு நம் நாட்டுப் பெண்கள் கூத்தாடுவதைக் கண்டு பரிகசிக்கத்தான் தோன்றுகிறது!

"பார்த்தாய் பார்த்தேன்", "எல்லாம் நாடக மேடை" என்னும் இரண்டு பாடல்களும் நன்றாயிருக்கின்றன.

ஹிந்தியில் ஏற்கனவே "அநாரி" என்ற பெயரில் வெளிவந்த படம்தான் இப்பொழுது 'பாசமும் நேசமு'மாக வந்திருக்கிறது. ஆரம்பம் முதல் கடைசி வரையில் பொருளற்ற ஒரு கதையைப் படமாக்கி நம் நடிகர்களின் பெயரைக் கெடுத்திருக்க வேண்டாம்.

தமிழில் நல்ல படங்களே வருவதில்லை என்று எல்லாரும் ஒருமுகமாகக் குறைப்பட்டுக் கொண்டிருக்கும் சமயத்தில் "பாசமும் நேசமும்" வந்திருக்கிறது — சுத்த மோசம்!

# நாட்டின் பாதுகாப்புக்கும்



# அபிவிருத்திக்கும் நெருங்கிய



# தொடர்பு உண்டு

பாதுகாப்பு முயற்சிக்கு பக்கபலமாக, ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு விவசாய உற்பத்தித் திட்டத்தை ஏற்படுத்த முயற்சிகள் எடுக்கப்பட்டுள்ளன.

கொள்கையை ஒருங்கிணைக்கவும், உற்பத்தியைப் பெருக்கவும், ஒரு உயர் அதிகார மத்திய விவசாய உற்பத்தி போர்டு அமைக்கப்பட்டுள்ளது. தற்போதுள்ள நெருக்கடியில், விளைச்சலை அதிகரிக்கவும், இறக்குமதியைக் குறைத்து, வெளிநாட்டுச் செலாவணியை பாதுகாத்து பாதுகாப்புத் தேவைக்கு பயன்பட, முயற்சிகள் செய்யப்பட்டு வருகிறது.

எண்ணத்தாலும், சொல்லாலும், செயலாலும்—விவசாய உற்பத்தியை அதிகரிக்கும் இந்த இயக்கத்திற்கு ஆதரவு அளியுங்கள்.



திட்டத்திற்கு உதவுங்கள்

இந்தியாவின் பாதுகாப்பைப் பலப்படுத்துங்கள்.

# நடப்பவைதான் நம்புங்கள்

சென்ற வாரக் கல்கியில் ஆல்பிரெட் ஹிட்ச்காக்கின் ''பறவைகள்'' என்ற திரைப் படத்தைப் பற்றி எழுதியிருந்தது. அதில் ''பல்லாயிரம் வருஷங்களாக மனித இனம் பறவை இனத்தை எத்தனை விதமான சித்திர வதைகளுக்கு ஆளாக்கி வந்திருக்கிறது! ஐந்து நிமிஷங்கள் யோசித்தால் ஐந்நூறு விதக் கொடுமைகளை எண்ணி விடலாம்'' என்று குறிப்பிட்டிருந்தது. ஆனால் யாராலும் கற்பனைகூடச் செய்து பார்க்க முடியாத நூதனக் கொடுமை பற்றி இப்போது ஒரு செய்தி வெளியாகி யிருக்கிறது. யு. எஸ். கடற் படையினர் மிட்வே தீவில் விஷ வாயுக்களின் உதவி கொண்டு இருபதாயிரம் அல்பட்ராஸ் பறவைகளைக் கொன்று விடத் தீர்மானித்திருக்கிறார்கள்! இதற்குக் காரணம் என்ன தெரியுமா? இந்தத் தீவில் உள்ள யு. எஸ். விமானத் தளங்களில் கடற்படையைச் சேர்ந்த யுத்த விமானங்கள் இறங்கி ஏறுவதற்கு இப் பறவைகள் தடையாக இருக்கின்றனவாம். மனிதர்கள் ஒருவர் மீது ஒருவர் போர் புரிய ஆயத்தம் செய்கையில் இடையில் ஒரு பாவமும் அறியாத பறவைகளுக்கு நேரும் கதியைப் பாருங்கள்!



ஃ ஃ ஃ

✽ பி. ஓ. ஏ. ஸி. எனப்படும் பிரிட்டிஷ் விமானக் கம்பெனிக்குச் சொந்தமான ஒரு போயிங் 707 விமானத்தைச் சுத்தம் செய்து கொண்டிருந்தபோது ஓர் எலி கண்ணில் தட்டுப்பட்டு விட்டதாம். அந்த எலியினால் பிரயாணிகளுக்கு ஏதேனும் உபத்திரவம் நேர்ந்து விடக் கூடாதே என்பதற்காக உடனே வேறு ஒரு விமானத்தில் பிரயாணிகள் ஏற்றி அனுப்பப்பட்டார்கள். பிறகு எலி வேட்டை ஆரம்பமாயிற்று. அதைக் கண்டுபிடிக்க முடியாமல் போகவே விமானத்தின் கதவுகளையெல்லாம் மூடி விட்டு விஷ வாயுவை செலுத்தி இரண்டு மணி நேரத்துக்கு உள்ளே வைத்திருந்தார்கள்.



இரண்டு கோடியே அறுபது லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள ஒரு பிரும்மாண்டமான விமானத்தைச் சுண்டெலி ஒன்று பறக்க முடியாமல் செய்து விட்டது என்பது ஒருபுறமிருக்க, எலியைக் கண்டால் எல்லாருக்குமே ஏன் இந்தனை பயமாகவும் அருவருப்பாகவும் இருக்கிறது என்பது ஆராய்ச்சிக்குரிய விஷயம் தான். அதன் ஜன்ம விரோதியான பூனையிடம் நாம் காட்டும் அன்புக்கோ அளவில்லை. நம்மைக் காட்டிலும் பஸிபிக் மகாசமுத்திரத்திலுள்ள தீவுகளில் வசிக்கும் ஆதிவாசிகள் பூனைகளிடம் அபாரமான ஆசை வைத்திருக்கிறார்கள். அங்கே யாராவது ஒரு பூனையைக் கொன்று விட்டதாய்த் தெரிந்தால்போதும், உடனே அந்த மனிதனுக்குக் கடுமையான தண்டனை விதித்து விடுவார்கள். என்ன தண்டனை தெரியுமா? முந்நூறு எலிகளை அவன் தன் கையாலேயே கொன்று, கொன்றதின் அடையாளமாக அவற்றின் வால்களை அறுத்துக் கொண்டு வரவேண்டும்! பாவம், எலிகள்! எலிக் குலத்துக்கு இத்தனை துன்பம் நாம் அளித்தபோதிலும் அதையெல்லாம் பொருட்படுத்தாமல் ஒரே ஒரு எலி மட்டும் நம் எல்லோரையும் சிரிக்க வைக்கும் பணியைத் தொடர்ந்து சிறப்பாகச் செய்து கொண்டிருக்கிறது. மிக்கிமவுஸ்தான் அந்த எலி!

ஃ ஃ ஃ

✽ நம் நாட்டில் அவதரித்த மகான்கள், மேதைகளின் நினைவாகத் தபால் தலைகளை வெளியிட்டு வருகிறோம். இப்போது சரோஜினி நாயுடுவின் உருவம் கொண்ட ஸ்டாம்பை வெளியிடப் போகிறார்கள். இவ்வாறு வெளியிடப்படும் ஸ்டாம்புகளில் அபூர்வமாகச் சில சமயங்களில் தவறுகள் நேர்ந்து விடுவதுண்டு. பின்னால் அவை கண்டுபிடிக்கப்பட்டுத் திருத்தப்படும். தவறான இத்தகைய ஸ்டாம்புகளின் விலை ஒரேயடியாக உயர்ந்து விடும். பிரிட்டிஷ் ஆதிக்கத்தின் கீழ் உள்ள மாரிஷியஸ் தீவில் 1847ல் முதல் ஸ்டாம்பு தயாரிக்கப்பட்டது. அதில் 'போஸ்ட் பெய்ட்' என்பதற்குப் பதில் 'போஸ்ட் ஆபீஸ்' என்று தவறாகப் பொறிக்கப்பட்டு விட்டது. அப்போது தயாரான ஐந்நூறு ஸ்டாம்புகளில் இன்று மிஞ்சி யிருப்பது இருபத்தாறுதான். இவற்றில் ஒரு பென்னி, இரண்டு பென்னி ஸ்டாம்புகள் சமீபத்தில் 3,92,000 ரூபாய்க்கு ஏலத்தில் போயின. அதை ரேமாண்ட் என்ற அமெரிக்கர் வாங்கினார். சரித்திரத்திலேயே ஸ்டாம்பு விஷயத்தில் கை மாறிய மிகப் பெரிய தொகை இதுதான்!

நம் நாட்டிலும் ஸ்டாம்பு அச்சடிப்பதில் சமீபத்தில் ஒரு தவறு நேர்ந்திருக்கிறது. அது என்ன என்று உங்களால் கூற முடியுமா?

விடை: அன்னிபெஸண்ட் நினைவாக வெளியிடப்பட்ட ஸ்டாம்பில் அவர் பிறந்த தேதி 1847 என்று இருக்க வேண்டும். இதற்குப் பதில் 1837 என்று அச்சாகி விட்டது.

ஃ ஃ ஃ

✽ முழு வளர்ச்சி பெற்ற யானை. அப்போதுதான் பிறந்த ஒரு திமிங்கலம். இவ்விரண்டில் அதிக எடையுள்ளது எது? திமிங்கிலக் குட்டிதான்! யானையைவிடக் குறைந்த பட்சம் ஐந்து டன் எடையாவது அதிகமாயிருக்கும் அந்தக் குட்டி!

—ஐராவதம்

# குண்டு மல்லிகை

அரு. ராமநாதன்

பிச்சுமணி விடாமல் தன் கண்களால் உமாவை ஏற இறங்கப் பல முறை பார்த்துக் கொண்டே யிருந்தான். உமா தன் முகத்தைத் தாழ்த்திக் கொண்டாள். நிலா வெளிச்சத்தில் அவள் ஓர் அழகுத் தேவதை போலவே மின்னினாள். அவளிடமிருந்து எழும் இயற்கையான ஒருவித நறுமணம் பிச்சுமணியின் நெஞ்சையெல்லாம் ஏதோ ஒரு கனவில் லயிக்கச் செய்தது.

''பிச்சுமணி! நான் போக வேண்டும்!'' என்று உமா சட்டென்று கிளம்பினாள்.

''நில்லுங்கள், உமா! உங்கள் மீதெல்லாம் சகதி தெளித்திருக்கிறது! முகத்தில்கூட இலேசாக அப்பி யிருக்கிறது! பங்களாவுக்குப் போய்க் கழுவிக் கொண்டு போகலாம், வாருங்களேன்!'' என்று பிச்சுமணி பரிதவித்தான்.

உமாவுக்குச் சிரிப்பதா அழுவதா என்றே புரியவில்லை. ''இந்த நிலையிலா உங்கள் பங்களாவுக்குள் என்னை வரச் சொல்லுகிறாய்?'' என்று கேட்டாள்.

'' ஏன், வந்தால் என்ன? என் தாத்தாவை நினைத்துப் பயப்படாதீர்கள்! வாருங்கள்; அவர் என்ன செய்து விடுவார் என்று பார்த்து விடுவோம்!'' என்றான் பிச்சுமணி.

''இப்படி யெல்லாம் உன் தாத்தாவோடு கட்சி கட்டுவதாக இருந்தால் உன்னோடு நான் பேசமாட்டேன்!''

''சரி, உமா..... நீங்கள் சொல்கிறபடியே செய்கிறேன்! தயவுசெய்து என்னோடு பேசாமல்மட்டும் இருந்து விடாதீர்கள்!'' என்று கூறிய பிச்சுமணி அவள் புறப்படுவதைக் கண்டதும், ''உமா! உங்கள் வீடுவரை நான் துணையாக வருகிறேனே!'' என்றான்.

''வேண்டாம்! நான் தனியாகவே போய்விடுவேன்!'' என்று உமா அவனைத் தடுத்து நிறுத்தி விட்டு ஓரடி எடுத்து வைத்தாள்.

ஆனால் அவள் அடுத்த அடி எடுத்து வைத்ததும் சகதி வழுக்கி விடவே கால் இடறிக் கீழே விழுந்து விடுவதுபோல் தடுமாறிச் சுழன்றாள்......

அவளையே கண் கொட்டாமல் கவனித்துக் கொண்டிருந்த பிச்சுமணி சட்டென்று பாய்ந்து அவளைத் தாங்கிப் பிடித்துக் கொண்டான். அப்போது அவனுடைய விசாலமான மார்பின் மீது உமாவின் பின் தலை சரியவே அவளுடைய கூந்தலின் பின்னல் கற்றை ஒன்று பிச்சுமணியின் சட்டைப் பொத்தானில் நன்றாகச் சிக்கிக் கொண்டு விட்டது.

அவளைப் பற்றியிருந்த பிச்சுமணி இனம் புரியாத ஒரு பரவசத்தில் அப்படியே ஒரு கணம் மெய்ம்மறந்து நின்றான்.

உமா பதறியவளாய் அவனுடைய சட்டைப் பொத்தானிலிருந்து தன் கூந்தல் கற்றையை விடுவித்துக் கொள்ள அரும்பாடு பட்டாள். ''பிச்சுமணி...! பிச்சுமணி!...'' என்று தத்தளித்தாள்.

பிச்சுமணி வெகு அமைதியாகத் தன் புது 'டெரிலின்' சட்டையை 'டர்'ரென்று கிழித்துச் சட்டைப் பொத்தானிலிருந்து உமாவின் கூந்தல் கற்றையை விடுவித்தது மட்டுமின்றிக் கிழிந்த சட்டைப் பகுதியை அவள் கையிலேயே கொடுத்து ''உமா! உங்கள் முகத்தில் உள்ள சகதியைத் துடைத்துக் கொள்ளுங்கள்!'' என்றான் புன்முறுவலுடன்.

உமா பிச்சுமணியை உற்றுப் பார்த்தபடியே ஒரு கணம் அசைவற்று நின்றாள்.

அவள் காலடியில் ஏதோ ஊர்வது போல் இருந்தது. உமா கீழே குனிந்து பார்த்தாள்.

அவள் காப்பாற்றிய ஆட்டுக்குட்டி தான், சவுக்கடி வேதனையால் சோர்ந்து சுருண்டு எங்கோ பதுங்கிக் கிடந்த பிறகு மெல்ல எழுந்து நொண்டி நொண்டி உமாவின் காலருகில் வந்து நின்று, நன்றியின் கனிவை அவளுடைய பாதங்களில் நனைத்தது.

அதைப் பார்த்ததும் உமாவுக்குத் தன் சித்தியின் கைக்குழந்தைதான் மறுபடியும் ஞாபகத்துக்கு வந்தது.

உமா அதை அன்புடன் தடவிக் கொடுத்தபடி, ''பாவம், இந்த ஜீவனை அடித்துக் கொல்லுவதை என்னால் பொறுக்க முடியவில்லை. அது ஏதோ என் கண் முன்னாலேயே கொலை செய்வது போல் இருந்தது. அதனால் தான்'' என்றவள் தன் கண்ணிமைகளை மூடி ஒரு கணம் ஏதோ சிந்தையில் அழுந்தி விட்டு ஒரு பெருமூச்சுடன், ''அதெல்லாம் உனக்குப் புரியாது, பிச்சமணி!'' என்றாள்.

''இல்லை, உமா! உங்கள் உள்ளம் எப்போதோ எனக்குப் புரிந்து விட்டது! முன்பொரு சமயம் உங்கள் தெருவில் ஒரு நாயை என் பெல்ட்டால் நான் அடித்த போதும், நீங்கள் குறுக்கிட்டு வந்து நாய்ச் சண்டையை விலக்கிய போதே உங்கள் ஜீவகாருண்யத்தையும் அன்புள்ளத்தையும் நன்றாகப் புரிந்து கொண்டு விட்டேன். அதிலிருந்து.... அதிலிருந்து.... உங்கள் மீது.......'' என்ற பிச்சமணி மேலே சொல்லத் தயங்கியவனாய்த் தன் ஆர்வம் ததும்பும் விழிகளால் உமாவையே ஏக்கத்தோடு உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான்.

உமா அதைக் கவனிக்காதவள் போல் தன் வாஞ்சையை யெல்லாம் ஆட்டுக் குட்டியின் மீதே பொழிந்து கொண்டிருந்தாள். ''இதைக் கொண்டு போய் டாக்டரிடம் காட்ட வேண்டும்'' என்றாள் பரிவுடன்.

''ஆமாம்! இப்போதே போய் மிருக வைத்தியரிடம் காட்டலாம்.''

''இதன் சொந்தக்காரர்.....?''

''அதைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம் உமா! ஆட்டுக்காரர் வந்து கேட்டால் தாத்தா பதில் சொல்லிக் கொள்வார்! அல்லது நானே இரண்டு மடங்கு விலை கொடுத்து விடுகிறேன்!'' என்ற பிச்சமணி அதி உற்சாகத்துடன் உமாவின் அணைப்பிலுள்ள ஆட்டுக் குட்டியை ஒரு பச்சிளம் குழந்தையைத் தடவிக் கொடுப்பது போலத் தடவிக் கொடுத்து விட்டு உமாவின் பின்னால் நடக்கத் தயாரானவனாய், ''உமா! என் பேபியை ஒர்க்ஷாப்பில் விட்டிருக்கிறேன்!'' என்றான் மெல்ல.

தன் பேபி ஆஸ்டின் காரைத்தான் அவன் குறிப்பிடுகிறான் என்பதைப் புரிந்து கொண்ட உமா, ''பரவாயில்லை; நடந்தே போகலாம்! வழியில் டாக்ஸி ஏதாவது வந்தால் அதை நிறுத்தி ஏறிக்கொள்கிறேன்!'' என்றாள்.

இருவரும் அருகருகே நடந்து செல்லலானார்கள்.

பிச்சமணிக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை. அந்த ஆனந்தம் அவனுடைய யௌவன முகம், உணர்ச்சிகரமான விழிகள், உறுதியான உதடுகள் அனைத்திலும் பொங்கிப் பொங்கி விழுந்து அதிசோபையுடன் மினு மினுத்தது.

மழை ஓய்ந்து விட்டதென்றாலும் அதன் வாடையான ஜிலுஜிலு வென்ற கூதல் காற்று வீசியது. வானத்துக் கருமேகங்களுக்கிடையே வெண்ணிலா சிக்கிக் கொண்டு, நீர்ப் பஞ்சணையில் கனமான பட்டுப் போர்வைக்கடியில் ஒளிந்து கொண்டிருக்கும் புது மணப் பெண்ணைப் போல் நாணிக் கோணி முடங்கிக் கிடந்ததால், அதன் குளுமையான நிலா வட்டம் வெளியே தெரியவில்லை. ஆனால் அவர்களுக்கு முன்னால் வானத்தில் ஒரு பக்கம் கருமேகங்கள் வேகமாக விலகிப் பனிச்சென்று ஒரு நட்சத்திரம் தன்னந்தனியே மாயா ஜாலம் போல் ஒளி வீசியது. வெள்ளி ரேகை போன்ற அதன் தூய்மையான வெண்ணொளி இருளின் கருமைப் பின்னணியில் பன்மடங்கு அழகாக ஜ்வலித்தது.

''அதோ அந்த நட்சத்திரத்தைப் பார்த்தீர்களா, உமா?'' என்று பிச்சமணி திடீரென்று கேட்டான்.

உமா அந்த நட்சத்திரத்தை ஏறிட்டு நோக்கிவிட்டுப் பிச்சமணியின் முகத்தை உற்றுப் பார்த்தாள்.

பிச்சமணியின் முகம் ஓர் ஆனந்தப் பிரமையில், அலாதியான ஒரு கற்பனையில் லயித்திருந்தது.

''அதென்ன நட்சத்திரம்?'' என்று உமா வியப்புடன் கேட்டாள்.

''அது என்ன நட்சத்திரமோ எனக்குத் தெரியாது! ஆனால் அந்த நட்சத்திரத்தை அடிக்கடி நான் பார்த்திருக்கிறேன்! பல இரவுகள் அந்த நட்சத்திரத்தை நினைத்துக் கொண்டு தூங்காமலும் இருந்திருக்கிறேன்!''

''ஏன்?'' என்று கேட்டாள் உமா.

''அலாதியான அந்த நட்சத்திரத்திலிருந்து அதி தூய்மையான, அதி அன்புமயமான அதி லாவண்யமான அழகுத் தேவதை ஒருத்தி என்னிடம் இறங்கி வருவாள்! அப்படி நான் சிறு வயது முதற் கொண்டே கனவு கண்டு வந்தேன்! என் கற்பனையில் உதயமாகி என் இதயம் முழுதும் ஆட்கொண்டிருக்கும் அந்த அழகுத் தேவதை என்றாவது ஒரு நாள் என் கண்முன் வருவாள். என்னை அவள் ஏற்றுக் கொள்வாள் என்றும் நம்பி யிருந்தேன்! அந்த நம்பிக்கை இப்போது நனவாகி விடுமென்று தோன்றுகிறது!'' என்று ஒரு பெருமூச்சுடன் சொன்ன பிச்சுமணி, ''ஏனெனில் என் கனவில் அந்த அழகுத் தேவதை தோன்றி அந்த நட்சத்திரத்திடமிருந்து கீழிறங்கி என்னிடம் வரும்போதெல்லாம் அவள் உடம்பிலிருந்து ஒரு தனியான நறுமணம் என்னை நெருங்கிச் சூழ்ந்து கொண்டு அப்படியே என் நெஞ்சையெல்லாம் அள்ளி அணைத்துக் கொள்ளும். ஆனால் அந்த நறுமணத்தை என்னால் கண்டுபிடிக்கவே முடியவில்லை. ஏனெனில், அது மல்லிகைப் பூவின் மணமோ, மருக்கொழுந்தின் மணமோ, மனோரஞ்சிதப் பூவின் மணமோ அல்லது இந்த உலகத்தைச் சேர்ந்த எந்த வித மணமோ அல்ல! அந்த அழகுத் தேவதைக்கு என்றே இயற்கையாக அமைந்த ஒருவித நறுமணம்! இத்தகைய நறுமணத்தை நேரில் முகரும் பாக்கியம் கிடைக்குமா என்றும் தவித்துக் கொண்டிருந்தேன்! அந்தப் பாக்கியம் எனக்குக் கிடைத்து விட்டது!'' என்று உணர்ச்சிப் பெருக்கோடு கூறிக் கொண்டே வந்த பிச்சுமணி, ''அதை ஒரு ஜன்மாந்திர வாசனை என்று தான் சொல்ல வேண்டும்!'' என்று ஒரு பெருமூச்சோடு முடித்தான்.

உமாவின் நெஞ்சு திக்திக்கென்று அடித்துக் கொண்டது! அவன் எந்தப் பெண்ணை அழகுத் தேவதையாக உவமித்துக் குறிப்பிடுகிறான் என்பதை அவள் புரிந்து கொள்ள விரும்பவில்லை. வெகுளிப் பையனான பிச்சுமணி இவ்வளவு இலக்கிய நயமாகக் காவியப் பாங்கில் கவிதைச் சுவையுடன் பேச எப்படிக் கற்றுக் கொண்டான்; அந்த அதிசய சக்தி அவனுக்கு எந்தப் பெண்ணிடமிருந்து கிடைத்திருக்கிறது என்பதை அவள் சிந்தித்துப் பார்க்கவும் விரும்பவில்லை.

பிச்சுமணியோ அதே உணர்ச்சிப் பெருக்கில் தொடர்ந்து பேசலானான். ''உமா! அந்த நட்சத்திரத்தை நான் உற்றுப் பார்க்கும்போதெல்லாம் அதிலுள்ள அழகுத் தேவதை வாஞ்சை மயமான புன்முறுவலுடன் என் உள்ளத்து உணர்ச்சிகளையெல்லாம் அப்படியே பிரதிபலிப்பாள்! நீங்களும் அந்த நட்சத்திரத்தை உற்றுப் பாருங்கள்! உங்கள் உள்ளத்தையும் அது கண்ணாடி போல் பிரதிபலித்துக் காட்டும்!'' என்றான்.

உமாவால் ஒரு பதிலும் சொல்ல முடியவில்லை! மறுபடியும் மௌனம் சாதித்தாள்.

''உமா! அன்பை வளர்க்கும் தொட்டில் போன்ற அந்த நட்சத்திரத்துக்குக் காதல் நட்சத்திரம் என்று நான் ஒரு புதுப் பெயர் சூட்டியிருக்கிறேன்!''

''பிச்சுமணி......'' என்று உமா ஏதோ சொல்ல வாயெடுத்தாள்.

அதற்குள் பிச்சுமணி குறுக்கிட்டு, ''உமா! தயவுசெய்து ஏதாவது சொல்லி என் கற்பனையைக் கலைத்து விடாதீர்கள்! அது என் உயிரையே சிதைப்பது போல் இருக்கும்!'' என்று பரபரப்புடன் கெஞ்சினான். ''நான் சொல்வதில் ஏதாவது உங்களுக்குப் பிடிக்கவில்லை என்றால் அது உங்கள் காதில் விழாதது போலவே பாவித்துக் கொள்ளுங்கள்! முரணாக எதுவும் சொல்லி

---

சென்ற பொதுத் தேர்தலுக்காகக் காங்கிரஸ் மந்திரிகள் நிதி திரட்டிக் கொண்டிருக்கும்போது நான் ஒரு வியாபாரியைக் கேட்டேன்: ''நீங்கள் சுதந்திரக் கட்சியிடம் அநுதாபம் கொண்டுள்ள போதிலும் ஏன் அந்தக் கட்சிக்குக் குறைவாகவும் காங்கிரஸ் மந்திரிகள் கேட்ட மாத்திரத்திலேயே அவர்களுக்கு ஏராளமாகவும் நன்கொடை தருகிறீர்கள்?'' என்று. அவர் சொன்னார்: ''முன்ஷிஜீ, உங்கள் வீட்டில் ஒரு கொள்ளைக்காரன் நள்ளிரவில் புகுந்து உங்களை மிரட்டினால் நீங்கள் என்ன செய்வீர்கள்? உங்கள் மனைவியின் நகைகள் உள்பட எல்லாவற்றையும் அவனிடம் கொடுப்பீர்கள் அல்லவா? ஆனால் உங்களுக்கு மனமிசைந்த கோயிலுக்குப் போகும்போது என்ன நிவேதனம் செய்கிறீர்கள்? 'உங்களுக்கு எவ்வளவு சௌகரியப்படுகிறதோ அவ்வளவுதானே!



— ஸ்வராஜ்யா ஆண்டு மலரில் ஸ்ரீ முன்ஷி

விடாதீர்கள்!'' என்று குரல் கம்மக் கூறினான்.

உமாவுக்கு அவளையறியாமலே கண்களில் நீர் துளித்தது. சட்டென்று முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண்டாள். என்ன பேசுவது, என்ன செய்வது என்றே அவளுக்குப் புரியவில்லை. மிக ஆழ்ந்த பெருமூச்சு விட்டு விட்டு வேகமாக நடந்தாள்.

பிச்சுமணியும் மௌனமாகவே அவளருகில் நடந்து வந்தான்.

உணர்ச்சிகளைக் கருக் கொள்ளச் செய்யும் அந்த மௌனத்தை நீடிக்க விட உமா விரும்பவில்லை! ஆனால் அந்த மௌனத்தைத் தவிர அவளால் வேறு எதுவும் பேச முடியவில்லை. ஏதோ மந்திரத்தால் கட்டுண்டவள் போலவே பிச்சுமணியின் அருகில் நடந்து சென்றாள்.

பிச்சுமணி எவ்வளவு விசித்திரமான, எவ்வளவு உணர்ச்சி வேகமுள்ள வாலிபன்.....? ஆனால் அவன் மீது கோபப்படவும் முடியவில்லை. அவன் சொல்லுவது எதையும் பெரிதாக எடுத்துக் கொள்ளாமல் சாதாரணமாக நினைத்துத் தள்ளி விடுவதே மேலென்று தோன்றியது. ஆனால் சாதாரணமாக அதை அவளால் தள்ளிவிட முடியுமா...?

உமா இதுவரை அனுபவித்தேயிராத ஓர் உணர்ச்சி — ஏதோ ஒரு மாயப் பொறிக்குள் தன் அந்தராத்மா சிக்கிக் கொண்டிருப்பதுபோன்ற ஒரு விசித்திரமான உணர்ச்சி அவளைப் பற்றிக் கொண்டு விட்டது. தன்னை அழுத்தும் அந்த உணர்ச்சியை உதறித் தள்ளமுயல்பவள் போல் அவள் நீண்டதொரு பெருமூச்சை உள்ளிழுத்தாள்.

அப்போது தெருவில் ஒரு மோட்டார்க் காரின் பிரகாசமான வெளிச்சம் இருளைக் கிழித்துக் கொண்டு வேகமாக ஓடி வந்து அவர்கள் முன்னால் சர்ரென்று நின்றது.

பிச்சுமணி, உமா இருவரும் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார்கள். அவர்களின் கண்கள் கூசின. காரின் பிரகாசமான விளக்கு வெளிச்சம் மெல்ல அணைக்கப்பட்டது.

## அத்தியாயம் முப்பத்துமூன்று

# காதல் நட்சத்திரம்

வெண்ணிலா கருமேகத்தின் அணைப்பிலேயிருந்து அப்போதுதான் மெல்ல விடுபட்டு நாணத்தின் மென்னொளியைச் சிந்தியபடி வானத்துப் பஞ்சணையிலேயே நழுவி ஓட முயன்றது.

''என்ன, உமா! நிலா வெளிச்சத்தில் உலாவியல் படலமா? உம்! அது உன் கால்களுக்கும் மனத்துக்கும் நல்ல ஆரோக்கிய சாதனம்தான்!'' என்று சிரித்துக் கொண்டே ஒரு குரல் காரினுள் டிரைவிங் ஆசனத்திலிருந்து பாய்ந்து வந்தது.

அது டாக்டர் ஜகந்நாதனின் குரல் தான்! அவர்தான் தெருவில் காரை வேகமாக ஓட்டி வந்து உமாவும் பிச்சுமணியும் திடுக்கிடும்படி அவர்கள் முன்னால் காரைச் சர்ரென்று நிறுத்தியவர்!

''டாக்டர்!....'' என்ற உமாவின் குரல் குழம்பியது. உமாவிடமிருந்து ஆட்டுக்குட்டியை வாங்கிக் கொண்டு அதை அணைத்தபடி நின்ற பிச்சுமணியோ ஜகந்நாதனின் குரலைக் கேட்டதும் விளக்கெண்ணெய் குடித்தவன் போல் முகத்தைச் சுளித்துக் கொண்டான்.

அவனுடைய அந்த முகபாவத்தை நிலா வெளிச்சத்தில் ஜகந்நாதன் உற்றுக் **கவனித்து உள்ளூற ரசித்துக் கொண்டே, ''என்ன, உமா! நம்** பிச்சுமணியை நவீன புத்தர் ஆக்கி விட்டாயே?'' என்று மிகுந்த பரிகாசத்தோடு கேட்டார்.

''டாக்டர்! அந்த ஆட்டுக் குட்டியை....'' என்று உமா அதைப் பற்றி ஏதோ விளக்கம் சொல்ல வாயெடுத்தாள்.

அதற்குள் ஜகந்நாதன் குறுக்கிட்டு, ''எனக்கு எல்லாம் தெரியும், உமா! பிச்சுமணியின் தாத்தாவே அந்த அற்புதக் காட்சியை என்னிடம் காரசாரமாக வர்ணித்துச் சொன்னார். ஆனால் ஆட்டுக்குட்டியைக் காக்க வந்த அதிசயப் பிடாரி வாத்தியாரம்மாதான் என்பது மட்டும் அவருக்குத் தெரியாது!'' என்றார், ஏதோ ஒரு மறைபொருளை உணர்த்துவதுபோல.

உமா கலங்கும் குரலில், ''டாக்டர்! பாவம், அந்த ஆட்டுக்குட்டியை என் கண் முன்னாலேயே சவுக்கால் அடித்துக் கொல்வதை என்னால் சகிக்க முடியவில்லை!'' என்றாள்.

''அதுவும் எனக்குத் தெரியும்! நீ அருமையாக வளர்த்து அகாலச் சாவுக்குப் பலி கொடுத்த உன் சித்தியின் கைக் குழந்தைதான் உன் கண்களுக்கு **அந்த ஆட்டுக்குட்டியின் உருவமாகத் தோன்றி உனக்குப் பிரமையூட்டியது!''**

# நேற்றிரவு அவளுக்குக் கடுமையான ஜலதோஷம்

ஆனால் அயர்ந்து தூங்கினாள். காலையில் சிரித்தமுகத்துடன் எழுந்திருக்கிறாள். அவள் ஜலதோஷம் பறந்தோடிவிட்டது. இதமளிக்கும் அனோலியம் தடவியதால்.

பட்டுப்போன்ற மேனிகளுக்கென்றே பிரத்தியேகமாகத் தயாரிக்கப்படுகிறது அனோலியம். துரிதமாகக் குணமளிக்கும் இதமான வலி நிவாரணி. சருமத்தில் எரிச்சலூட்டாது. இதில் அடங்கியுள்ள மூலிகைகள் ஜலதோஷம், தலைவலி, நரம்புவலி முதலியவைகளை விரைவில் போக்குகின்றன. உங்களுக்கும் கூட அது நல்லது. எப்போதும் ஒரு டியூப் வைத்திருங்கள்.




## அனோலியம்

துரிதமாகக் குணமளிக்கும்
இதமான வலி நிவாரணி




அமிர்தாஞ்சன் லிமிடெட், மதராஸ் - பம்பாய் - கல்கத்தா - டில்லி

AM/AN/2362a



பம்பாயில் சமூகம், தொழில், போக்கு வரத்து முதலிய துறைகளில் பிரசித்தி பெற்ற ஸ்ரீ என். பாலகிருஷ்ணா அவர்கள் குமாரி சௌ. கங்கா பாலகிருஷ்ணா B. A.க்கும், சௌராஷ்ட்ர ராஜ்யத்தின் ஓய்வு பெற்ற பிரதம அக்கவுண்ட்ஸ் ஆபீஸர் ஸ்ரீ கே. கே. சுப்ரமண்யம் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி எஸ். விஸ்வநாதன் M. A., M. Sc., க்கும் 16-1-1964 அன்று சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது.



மண்ணச்சநல்லூர் நியூஸ் ஏஜண்ட் திரு பீ. ஏ. கருப்பையாவுக்கும் ஓமாந்தூர் சொ. வெ. அ. சிதம்பரம் பிள்ளை அவர்களின் குமாரத்தி திருமதி ஆனந்திக்கும் சமீபத்தில் ஓமாந்தூரில் நடந்த திருமணத்துக்கு நண்பர்களும் உறவினர்களும் வந்திருந்து சிறப்பித்தனர்.

வாழ்க, மணமக்கள்!

உமா திடுக்கிட்டாள். தன் மனத்துக்குள் உறைந்திருக்கும் அந்த உண்மையை ஜகந்நாதன் எப்படிக் கண்டு பிடித்தார் என்று ஆச்சரியப்பட்டாள்.

''அதெப்படி எனக்குத் தெரியும் என்று ஆச்சரியப்படுகிறாயா, உமா? நான் வெறும் டாக்டர் மட்டுமல்ல, ஒரு மனோதத்துவ நிபுணன்! உன்னைப் போல் அமைதியும் அடக்கமும் வாய்ந்த ஓர் இளம் பெண் திடீரென வீராங்கனையாக மாறி, அன்னியரின் காம்பவுண்டுக் கேட்டின் மீதே ஏறி உள்ளே குதித்துக் கேவலம் ஓர் ஆட்டுக்குட்டியைக் காப்பாற்றும் போராட்டத்துக்காக உன் உயிரையே பிணையம் வைக்கத் துணிகிறாய் என்றால் அதன் காரணம் என்னவாக இருக்கும் என்று யோசித்தேன். உடனே நீ குழந்தை வளர்த்த படலம் என் மூளையில் முட்டியது!'' என்றார் ஜகந்நாதன்.

அவருடைய அந்த அறிவாற்றலை நினைத்து உள்ளூற வியந்த உமாவுக்கு அவர்மீது அதிக மதிப்பே உண்டாயிற்று.

பிச்சுமணி பொறுமையிழந்தவனாய் ஜகந்நாதனை நோக்கி, ''என் தாத்தாவை நீர் ஏன் பார்க்கப் போனீர்?'' என்று கத்தினான்.

''ஒரு தர்ம கைங்கரிய விஷயமாகத்தான் உன் தாத்தாவிடம் அடிக்கடி நான் போய் வருகிறேன்!''

''அதென்ன தர்ம கைங்கரியம்?'' என்று பிச்சுமணி சீறினான்.

''ஏழைகளுக்கு இலவச வைத்தியம் செய்வதற்காக அவர் தம் சொத்துக்களையெல்லாம் என் நர்ஸிங்ஹோமுக்கு ரகசியமாக எழுதி வைக்க வேண்டும். அதற்காகத்தான் நான் அரும்பாடு படுகிறேன்! ஆனால், பிச்சுமணி.... என்னுடைய அந்த அரும்பெரும் லட்சியம் உன்னுடைய உதவியால்தான் நிறைவேற முடியும்! அதாவது நீ உன் தாத்தாவுக்கு விரோதமான காரியங்களையே செய்து அவரால் நீ பகிஷ்கரிக்கப்பட்டால்தான் அவர் உன்னை விட்டு விட்டு என் நர்ஸிங்ஹோமுக்குத் தம் சொத்துக்களை யெல்லாம் எழுதி வைப்பார்!'' என்று ஜகந்நாதன் விஷமமாகச் சிரித்தார்.

பிச்சுமணி தலைகுனிந்தபடி பற்களை நறநற வென்று கடித்தான்.

உமா ஏதோ பலத்த யோசனையில் ஆழ்ந்தாள்.

அவளை நோக்கி டாக்டர் ஜகந்நாதன் பரிவுடன், ''உமா! காரில் ஏறிக் கொள்! உன் வீட்டைத் தாண்டித்தான் நான் போகப் போகிறேன்!'' என்று கூறினார்.




''இந்த ஹோட்டலில் ஒரே சமயத்தில் இரண்டு தப்புகள் நடந்திருக்கின்றன. ஒண்ணு, போர்டிலே உப்புமாவுக்கு 'ப்' இல்லே! இங்கு உள்ள உப்பு மாவுக்கு உப்பு இல்லே.''

''டாக்டர்.......'' என்று உமா ஏதோ சொல்ல வாயெடுத்தாள்.

''ஓ! நீ காப்பாற்றிய ஆட்டுக் குட்டிக்குக் காயம் பட்டிருக்கிறது. அதை மிருக வைத்தியரிடம் காட்டிச் சிகிச்சை செய்வதற்காகப் புறப்பட்டீர்கள், இல்லையா?'' என்று கேட்டார்.

''ஆமாம்!''

''நானே ஆரம்ப காலத்தில் ஒரு மிருக வைத்தியன்தான்! பிறகு மிருகங்களைவிட மனிதர்களின் வியாதிகளோடு விளையாடுவதுதான் அதிக லாபகரமான தொழில் என்று நினைத்துப் புதுப் புது வியாதிகளின் பெயர்களைக் கண்டு பிடித்து வருவதற்காக மேல்நாட்டுக்குச் சுற்றுப் பயணம் சென்றேன். அதோடு ஜீவகாருண்யத்தையும் கைவிட்டு விட்டேன்! இப்போது மீண்டும் உனக்காக மிருக வைத்தியனாக மாறுகிறேன். மனிதர்களைவிட மிருகங்களுக்கு வைத்தியம் செய்வது சுலபந்தான்! ஏனெனில், வருமானத்துக்கும் அந்தஸ்துக்கும் ஏற்றபடி 'பேஷண்டு'களின் வலி வாதனைகளைப் பொருட்படுத்தவோ, வியாதிகளை நீட்டிக் குறைக்க வேண்டிய அவசியமோ இல்லை அல்லவா?'' என்று கண்ணைச் சிமிட்டிக் கொண்டே தமாஷாகச் சொன்ன டாக்டர் ஜகந்நாதன் பிறகு தம் குரலில் விவகாரத் தோரணையை வரவழைத்துக் கொண்டு, ''உமா! முதலில் என் நர்ஸிங்ஹோமுக்குப் போய் உன் ஆட்டுக் குட்டியை 'ஸ்பெஷல் பேஷண்'டாகச் சேர்த்து விட்டுப் போகலாம்!'' என்றார். (தொடரும்)

அட்டைப்படக் கதை

# இன்ப அரும்பு

ஜெகசிற்பியன்

மாடியறைக் கதவை இழுத்துத் தாழிட்டுக் கொண்டு வெளி வந்த ராமதுரை, கடைசியாக ஒரு தரம் பூட்டை இழுத்துப் பார்த்து விட்டுத் தனக்குள் மெல்லச் சிரித்துக் கொண்டான்: 'இது பூட்டியிருந்தாலென்ன, திறந்து கிடந்தால் என்ன? இனிமேல் எல்லாம் ஒன்றுதான்.'

சாவியைச் சட்டைப் பையில் போட்டுக் கொண்டு படிகளில் இறங்கிய அவன் தயங்கி நின்றான். ''பாவம், நாளைக்கு இங்கே வந்து ஜபர்தஸ்து செய்யப் போகிறவர்களுக்கு வீணாகச் சிரமம் கொடுப்பானேன்? இது இங்கேயே இருக்கட்டும்'' என்று முணுமுணுத்துக் கொண்டே படி இறக்கக் கவரில் பதித்திருந்த மின்விளக்குப் பொத்தானில் சாவிக் கொத்தை மாட்டிவிட்டுச் சாவதானமாகத் தெருவிலிறங்கி நடக்கலானான்.

கண்ணில் படும் காட்சிகளெல்லாம் அவனுக்கு அர்த்தமற்றவைகளாகத் தோன்றி எதிர்ப்படும் ஜனங்களெல்லாம் அவன் பார்வையில் அசடுகளாகவும் முட்டாள்களாகவும் பட்டனர். ஆயினும் அந்தக் காட்சிகளையும் அந்த ஜனங்களையும் இனி தன்னால் பார்க்க முடியாது போன்ற ஒருவித ஏக்கத்துடன் — தன் பார்வையைப் பரக்க ஓட்டியவாறு நடந்தான்.

அந்தத் தெருவின் ஓரிடத்தில் ஏழெட்டுச் சிறுவர்கள் சேர்ந்து கோலி ஆடிக்கொண்டிருந்தனர். பைத்தியக்காரனைப் போல் தனக்குத் தானே பேசிக் கொள்வதும், சிரித்துக் கொள்வதுமாக வந்த ராமதுரை தயங்கி நின்றான். பிறகு தெருவின் ஓரமாக ஒதுங்கி நின்று சிறுவர்களின் 'பேந்தா' ஆட்டத்தைச் சுவாரஸ்யமாகப் பார்த்து ரசிக்கலானான்.

இதைக் கவனித்துக் கொண்டிருந்த சிறுவர்களில் ஒருவன் தன் சகாக்களிடம் ஏதோ இரகசியமாகச் சொல்லி விட்டு,

"டேய்! ஓடியாந்துடுங்க! ஓடியாந்துடுங்க!" என்று கூவிக்கொண்டே ஓட ஆரம்பித்தான். மற்ற சிறுவர்களும் கையிலிருந்த கோலிக் குண்டுகளைக் கீழே போட்டுவிட்டு மிரண்டடித்துக்கொண்டு ஓடினர்.

ராமதுரைக்கு உள்ளூறப் பயமேற்பட்டு விட்டது. தன்னையே ஒரு முறை ஏற இறங்கப் பார்த்துக் கொண்டான். முகத்தைப் பார்க்கக் கண்ணாடி இல்லை. ஆனால் அந்தச் சிறுவர்கள் மிரண்டு ஓடியதிலிருந்து தன் முகம் எப்படி இருக்கும் என்பதை அவனால் ஊகித்துக் கொள்ள முடிந்தது.

அவன் என்ன, அத்தனை அவலட்சணமானவனா? அப்படிச் சொல்ல முடியாது! ஓர் இருபத்தெட்டு வயசு ஆண் மகனிடம் சராசரியாக இருக்கக் கூடிய பிரதான லட்சணங்கள் பெரும்பாலும் அவனுடைய முகத்தில் பொருந்தியே யிருந்தன. ஆயினும் இப்போது ஏன் இவ்வளவு விகாரமாகத் தோற்றமளிக்கிறான்? அது அவன் மனத்தில் புகைந்து கொண்டிருக்கும் ஒரு பயங்கர முடிவின் புறத்தோற்றம் என்றுதான் சொல்ல வேண்டும்! அந்தப் பயங்கர முடிவுதான் என்ன? —

அமைதியாக நடந்து கொண்டிருந்த அவன் ஒரு ரயில்வே லெவல்கிராஸிங்கை நெருங்கியதும் தயங்கி நின்று தன் கைக் கடிகாரத்தில் மணி பார்த்தான். ஆறரை.

அவன் முகத்தில் கவலைக் குறிகள் தோன்றின. 'இப்படியே ரயில்பாதை ஓரமாக நடந்தால் அரை மணி நேரத்தில் அந்த இடத்தை அடைந்து விடலாம்; ஆனால் பொழுது இன்னும் இருட்டவில்லையே! இன்றைக்கு ஏன் இந்தப் பாழும் பொழுது இவ்வளவு மெதுவாக நகர்ந்து கொண்டிருக்கிறது? கூடாது! சரி; இப்போது என்ன செய்யலாம்?'

அவன் ஒரு முடிவுக்கு வந்தான். அவன் தைரியமாக ஒரு தியேட்டரில் நுழைந்து தமிழ்ப் படம் ஒன்றை முழு நேரமும் உட்கார்ந்து பார்த்து விட்டு வெளியே வந்தான். அவனுடைய அந்தப் பயங்கர முடிவு இப்போது பன்மடங்கு உறுதியாகிவிட்டிருப்பதை உணர்ந்து பெரிதும் மகிழ்ச்சியடைந்தான்!

இரவு மணி ஒன்பதரை.

அவன் நடந்தான். அரை மணி நேர நடைக்குப் பின் தான் அடைய வேண்டிய இடத்துக்கு வந்து சேர்ந்தான்.

அது ஒரு ரயில் பாலம். கீழே இடுப்பளவு தண்ணீர் ஓடிக் கொண்டிருந்தது. மேலே மின்சார ரயில் வண்டிகள் போவதற்கும் வருவதற்குமாக இரண்டு இருப்புப்பாதைகள். அவற்றின் பக்கத்தில் புகை வண்டிக்கெனத் தனியாக ஓர் இருப்புப் பாதை. அதற்குச் சற்று மேலண்டைப்புறம் — பாலச் சுவரின் பக்கவாட்டில் மின்சாரக் கம்பிகளைத் தாங்கிய உயரமான இரும்புச் சட்டக் கம்பம் ஒன்று. அங்கிருந்து தெற்கே அரை மைலுக்கு அப்பால் சிறியதொரு ரயில் நிலையம். வடக்கே இரண்டு பர்லாங் தூரத்தில் ஒரு லெவல் கிராஸிங். இவற்றுக்கிடையே ஆற்றங்கரை ஓரமாக ஒரு மயானம். இரவு ஒன்பது மணிக்கு மேல் அந்தச் சுற்று வட்டாரத்தில் மனித நடமாட்டத்தையே பார்க்க முடியாது. விடியும்வரை அங்கே பயங்கர அமைதியும் இருட்டுமே கொலுவீற்றிருக்கும்.

இப்படி விளங்கிய அந்தப் பாலத்தடியில் தன்னந் தனியாக வந்து நின்ற ராமதுரை தன்னை மீறிய ஓர் அச்சக் குறுகுறுப்புடன் மேலே அண்ணாந்து பார்த்தான். பாலத்தின் குறுக்கே பிரும்மாண்டமான கர்டர்களில் வரிசையாக அடுக்கப்பட்டிருந்த ஸிலீப்பர் கட்டைகளின் மேல் மூன்று ஜோடி வடக் கயிறுகள் அனற் பிழம்பாக ஜ்வலித்துக் கொண்டு கிடந்தன. தொலை தூரத்தில் இருக்கும் லெவல்கிராஸிங் அருகில் எரிந்து கொண்டிருந்த சிக்னல் விளக்கின் சிவப்பு ஒளி தண்டவாளங்களின் மேல் தெறித்து விழுந்து அவை நெருப்புக் கயிறுகள் போன்ற தோற்றத்தை உண்டுபண்ணிக் காட்டியது போலும்!

ராமதுரையின் மனம் 'திக் திக்' என்று அடித்துக் கொண்டது. அனற் பாளங்களாக மின்னிய அந்தத் தண்டவாளங்களைப் பயப் பிராந்தியுடன் பார்த்துக் கொண்டே பின்னால் நகர்ந்தவன் சட்டென்று விறைத்து நின்றான்.

'சே, இது என்ன கோழைத்தனம்! இவ்வளவு தூரம் இந்த இடத்தைத் தேடிக் கொண்டு வந்து கடைசி நேரத்தில் பின் வாங்கி ஓடுவதா? இன்று என் முடிவை இவ்விடத்தில் எப்படியும் நிறைவேற்றியேவிட வேண்டும்!'

அவன் சரேலென்று திரும்பி, ரயில் பாதையின் மேட்டை நோக்கிப் பரபரவென்று ஏறினான். இவ்வளவு நேரம் அங்கே அடர்ந்து கிடந்த இருளைக் கிழித்துக் கொண்டு குபீரென ஒளி வெள்ளம் வந்து பாய்ந்தது. மேட்டின் பாதிச் சரிவில் தயங்கி நின்ற அவன் வெளிச்சம் வரும் திக்கைப் பார்த்தான். தெற்கிலிருந்து ஒரு மின்சார ரயில் வருவது தெரிந்தது.

ராமதுரையின் கால்கள் தடதடவென்று ஆடின. மனமோ அதைவிட வேகமாக அடித்துக் கொண்டது.

கண்ணைப் பறிக்கும் ஒளிப் பாய்ச்சல்! கடகடாவென்ற பேரொலி முழக்கம்!

ராமதுரை சடாரென்று பின்னால் சரிந்து அங்கிருந்த தந்திக் கம்பத்தை இறுகப் பிடித்துக் கொண்டான். பாலத்தைக் கடந்த மின்சார ரயில் படுவேகமாக ஓடி மறைந்தது.

'என்ன இப்படிப் பயந்துவிட்டேன்! முன்னால் பாய்வதற்குப் பதிலாகப் பின்னால் இறங்கிவிட்டேனே! முதல் சந்தர்ப்பம் முறிந்தது! இனி அடுத்த சந்தர்ப்பத்துக்குக் காத்திருக்க வேண்டியதுதான்!'

சோர்வுடன் நடந்து போய்ப் பாலத்துச் சுவரோரம் இருந்த மின்சாரக் கம்பத்தின் சிமெண்ட் மேடைமேல் ஏறி உட்கார்ந்து கொண்டான். குழம்பித் திலைடைந்திருந்த அவன் மனம் அவனால் குப்பையாக்கிக் கழித்த நாட்குவியலைப் போய்ச் சீய்க்க ஆரம்பித்தது.

ராமதுரைக்குப் பூமியின் மேல் பற்று ஏற்பட்டு, அதில் கால்களை ஊன்றி நடக்கத்




தொடங்கியபோது அவனுடைய பெற்றோர் பூமியில் தமக்கிருந்த பற்றை அறுத்துக் கொண்டு ஒருவர் பின் ஒருவராக 'மேலே' பறந்து போய்விட்டனர். அதனால் அநாதையாகிவிட்ட அவனை ஆதரித்து வளர்த்துக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு அவனுடைய தாய் மாமனான தணிகாசலத்தின் மேல் விழுந்தது. தமக்குப் பிடிக்காவிட்டாலும் ஊர் உலகத்துக்காகச் சிலர் சில காரியங்களைச் செய்ய முற்படுவது உண்டல்லவா? தணிகாசலம் பயப்பட வேண்டியவைகளுக்குப் பயப்படாதவர்; ஆனால் ஊர் உலகத்துக்கு ரொம்பவும் பயப்படுகிறவர். அவருடைய அந்தஸ்தும், கௌரவமும் அப்படிப்பட்டவை. ஆகவே, அவனைக் காப்பாற்றும் பொறுப்பை அவர் ஏற்றுக் கொண்டார்.

அவருடைய மனைவி ஞானம்பாள் பயப்பட வேண்டியவைகளுக்கு உண்மையாகவே பயந்து நடப்பவள். பெரிய மனம் படைத்தவள். அவளுக்குப் பிறந்ததெல்லாம் பெண் குழந்தைகள். அவற்றில் உருப்படியாகத் தேறியவை இரண்டு. ஒன்று கால் ஊனம்; மற்றொன்று தங்க விக்கிரகம். எனவே ஆண் பிள்ளையான ராமதுரையை அவள் தன் பிள்ளையாகவே பாவித்து நேசித்து வளர்த்து வரலானாள்.

பையன் வளர்ந்தான், படித்தான். வாலிபப் புருஷனானான். புருஷ லட்சணத்தை நிலை நாட்ட ஓர் உத்தியோகத்திலும் அமர்ந்து கொண்டான். மாதம் நூற்றி எண்பது ரூபாய் சம்பளம். ஊர் உலகத்துக்குப் பயந்து தம் கடமையைச் சரியாகவே நிறைவேற்றி விட்டார் தணிகாசலம். ஆனால் ராமதுரை அவரிடம் இன்னும் ஒரு கடமையை எதிர்பார்த்தான். அதுதான் அவனுடைய கல்யாணம்.

ராமதுரை தன் மாமாவின் இளைய மகளைக் காதலித்தான்.

தணிகாசலம் ஊர் உலகத்துக்குப் பயப்படுகிறவர். அவருடைய அந்தஸ்தும் கௌரவமும் அப்படி. பாவம், அவர் என்னதான் செய்வார்?

'அந்தப் பேச்சை மட்டும் பேசாதே. அதை அடியோடு மறந்து விடு.' — இதுதான் மாமாவிடமிருந்து அவனுக்குக் கிடைத்த பதிலாகும்.

இந்தப் பதிலை, அவனும் அவர் மகளும் சேர்ந்து பள்ளிப் படிப்புப் படித்தபோதே இலேசாக ஒரு கோடி காட்டிச் சொல்லி விட்டிருக்கலாம்; சொல்லியிருந்தால் இந்த வம்பே வந்திருக்காது. அவர் சொல்லவில்லை. அதற்குக் காரணம் அவர் மனைவி ஞானம்பாள்தான். அவள் என்ன கண்டாள், தன் இளைய பெண்ணுக்கு ஓர் ஐ. ஏ. எஸ். மாப்பிள்ளை காத்துக் கொண்டிருக்கிறான் என்று? கல்யாணம் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுகிறது! அவள் இருப்பதும் வாழ்வதும் பூமியில் அல்லவா?

ராமதுரைக்கு மனம் உடைந்து விட்டது. சும்மாகூட உடையவில்லை. 'மளுக்'கென்று உடைந்து விட்டது.

அதோடு விஷயம் தீர்ந்து போயிற்றா? விதி அவனை விடவில்லை. தேன் எடுக்கப் போய்த் தேள் கொட்டிக்கொண்ட கதையாகிவிட்டது. தணிகாசலம் தனது இளைய மகளைத்தான் கொடுக்க மறுத்தாரே தவிர, ஒரு கால் ஊனமாயிருந்த மூத்த மகளை உடனடியாக அவன் தலையில் கட்டி வைக்கத் துடியாய்த் துடித்தார்!

மூத்த பெண்ணின் சுப காரியத்தை முதலில் முடித்தால்தானே இளைய பெண்ணின் கல்யாணத்தைப் பற்றிப் பேசமுடியும்? அவருடைய தீவிரத்துக்கு இதுதான் அடிப்படை! இளைய பெண்ணுக்கு வாய்க்கவிருக்கும் ஐ. ஏ. எஸ். மாப்பிள்ளை அதற்குள் எங்காவது பறந்து விடுவானோ என்ற பயம் அவருக்கு!

ராமதுரை பயந்து விட்டான். அவனுடைய உயிர், உடல், கல்வி, உத்தியோகம் எல்லாமே தணிகாசலத்தின் பைசா, அணா ரூபாயிலிருந்து வளர்ந்தவை; உயர்ந்தவை; உறுதிப்பட்டவை. இந்நிலையில் அவருடைய உத்தரவை அல்லது வேண்டுகோளை அவனால் எப்படி மறுக்க முடியும்?

தன் காதல் தோல்வியுற்றதைப் பற்றிக் கூட அவன் அதிகம் கவலைப்படவில்லை. கொஞ்ச காலத்துக்குத் தாடி வளர்த்துவிட்டுப் பிறகு 'ஷேவிங்' பண்ணிக்கொண்டால் எல்லாம் சரியாகி விடும் என்று அதற்கு ஒரு மாற்று வழி கண்டுபிடித்து வைத்திருந்தான். ஆனால் எதிர்பாராத விதமாகத் தன்னைத் துரத்திக் கொண்டு வரும் இந்தக் கட்டாயக் கல்யாணத்தைப் பற்றித்தான் அவனுக்கு ஒரே கதி கலக்கமாகி விட்டது.

தனக்கு ஏற்பட்ட காதல் தோல்வியிலிருந்தும் இனி ஏற்படவிருக்கும் கல்யாண விபத்திலிருந்தும் மீள வெகு எளிதாகவே ஒரு வழியைக் கண்டுபிடித்தான். இந்த வழியின் இறுதி முனையில் தான் இதோ அவன் உட்கார்ந்து கொண்டிருக்கிறான்!

ராமதுரையின் மனத்தில் பளிச்சென்று ஒரு புதிய யோசனை தோன்றியது.

'ஆமாம்; அதுதான் சரி. ரயிலுக்கு முன்னால் தண்டவாளத்தின் மேல் பாய ரொம்பவும் மனத் துணிச்சல் வேண்டும். அது என்னிடம் இல்லை என்பது சற்று முன் தெரிந்து விட்டது. ஆனாலும் அதை விடச் சுலபமான மார்க்கம் ஒன்று இருக்கிறது. இதிலே துன்பம் இல்லை; பயங்கரம் இல்லை. ஒரே ஒருகணம் தான். முடிவு முடிவாகி விடும்.'

அவன் எழுந்து நின்று சுற்றுமுற்றும் பார்த்தான். தொலைவில் எரிந்து கொண்டிருந்த சிவப்பு விளக்கு கண்ணைக் குத்தியது. அலட்சியமாக உடலை ஒரு குலுக்குக் குலுக்கிக் கொண்டு, இரும்புச் சட்டங்களால் ஏணி போல் அமைந்த உயரமான மின்சாரக் கம்பத்தின் மேல் மளமளவென்று ஏறலானான்!

கம்பத்தின் பாதியளவுக்கு ஏறிவிட்ட ராமதுரையின் தலையில், 'அபாயம்' என்ற போர்டு இடித்தது. பேய் நகங்கள் போல் நீட்டிக் கொண்டிருந்த இரும்பு முட்கள் வேறு கைகளைக் குத்தின. ஆயினும் அதை யெல்லாம் பொருட்படுத்தாமல் ஆவேச வெறியுடன் இன்னும் மேலே ஏற முயன்ற அவன் ஏனோ திடுக்கிட்டுத் திரும்பினான்.

'என்ன அது, சத்தம்? யாரோ அழுவது போல் கேட்கிறதே!'

ராமதுரையின் உடல் படபடத்தது. கம்பத்தை அணைத்துப் பிடித்துக் கொண்டு சுற்றிலும் தன் பார்வையை ஓட்டினான். ஒன்றும் புலப்படவில்லை.

'சே! அழுகுரலாவது, ஒன்றாவது! எல்லாம் என் மனப் பிராந்தியின் பொய்க் குரல், அவ்வளவுதான்!'

அவன் மீண்டும் மேலே ஏற முயன்றான். மறுபடியும் அதே அழுகுரல்.

அவன் உடல் குப்பென்று வியர்த்தது. கையும் காலும் நடுங்கிக் கிடுகிடுத்தன. அழுகுரல் வரும் திசையை உற்று நோக்கினான். அதே சமயம் அந்த ரயில் பாலத்தின் மேல் பளீரென்று வெளிச்சம் பாய்ந்தது. தொலை தூரத்தில் வந்து கொண்டிருந்த மின்சார ரயில் வண்டியின் விளக்கு வெளிச்சம்தான் அது. அவ்வெளிச்சத்தில், பாலத்தின் நடுவே, ரயில் தண்டவாளத்தின் மேல்—வெள்ளையாக ஓர் உருவம் தென்பட்டது!

'அது என்ன மனித உருவமா? அல்லது ஆவியின் பொய்த் தோற்றமா?'

ராமதுரையைப் பயம் பிடித்து உலுக்கியது. விளக்கு வெளிச்சம் மேலே பரவி அவனைத் துலக்கிக் காட்டியது. மின்சாரக் கம்பத்தில் தொற்றிக்கொண்டிருக்கும் அவன் இப்போது யாருடைய கண்ணுக்கும் புலப்படலாம். ரயில்வே கிராஸிங்கிலிருக்கும் ஆளோ, அல்லது ரயில் வண்டியின் டிரைவரோ கூடப் பார்த்து விடலாம். அப்படிப் பார்த்தால் அவனுடைய முயற்சி தோற்று விடும்; புதிய தொல்லைகள் தொடரும்.

இதைப் பற்றி அவன் கவலைப்படவில்லை. அங்கே, ரயில் தண்டவாளத்தின் மேல் உட்கார்ந்து அழுது கொண்டிருக்கும் அந்த உருவத்தைப் பார்த்துத்தான் ஒரேயடியாகப் பீதியடைந்து போனான்.

அடுத்த கணம் அந்த மின்சாரக் கம்பத்தின் மேலிருந்து எப்படித்தான் அவ்வளவு சீக்கிரம் இறங்கினானோ, அது அவனுக்கே தெரியாது!

பயந்து நடுங்கி நின்ற அவன் திடீரென்று ஏதோ ஒருவித ஆவேசத் துணிவு பெற்றவனாய் அந்த உருவத்தை நோக்கிப் பாலத்தின் மேல் பாய்ந்து ஓடினான்.

அழுகுரல் நின்றது. 'கிரீச்' சென்ற அலறல் ஒலி. அது பெண்ணோ, பேயோ! ராமதுரை அப்படியே அலக்காகத் தூக்கிக் கொண்டு, அஜாக்கிரதையாகப் பாலத்தின் மேல் நடப்பவர்கள் ஆபத்திலிருந்து தப்புவதற்காகப் பக்கவாட்டில் கட்டப் பெற்றிருந்த ஒரு வட்டக் கிராதிக்குள் தாவிக் குதித்தான்.

வண்டி பாலத்தின் மேல் ஏறியது. ஒரே கிடுகிடுப்பு. இடி முழக்கம்.

ராமதுரை தன் ஏந்தலிலிருந்த பாரத்தைக் கிராதி வட்டத்துக்குள் இறக்கி விட்டு அதன் முகத்தை ரயில் விளக்கின் வெளிச்சத்தில் கூர்ந்து நோக்கினான். சந்தேகமில்லை; அது பேயல்ல, பெண்தான்!

பாலத்தைக் கடந்து கடகடவென்று ஓடி மறைந்தது ரயில் வண்டி.

அவள் அவனைச் சுட்டெரித்து விடுவது போல் வெறித்துப் பார்த்தாள். அவனும் அவளைப் பயப் பிராந்தியுடன் விழித்து நோக்கினான்.

''என்னை ஏன் தடுத்தீர்கள்? என் முயற்சியில் ஏன் குறுக்கிட்டீர்கள்?'' —ஆத்திரம் பொங்கக் கேட்டாள் அவள்.

''குறுக்கிட்டேனா?.... உதவி அல்லவா செய்தேன்?'' — ராமதுரை குமுறினான்.

''நான் உங்களைக் கூப்பிடவில்லை; உங்கள் உதவியைக் கேட்கவுமில்லை.''

''அப்படியானால் நீ ரயிலில் அரைபட்டுச் சாகத்தான் இங்கு வந்தாயா?''

''ஹும்! குழந்தைத்தனமான கேள்வி!'' வெறுப்புடன் முகத்தைத் திருப்பிக் கொண்டாள் அவள்.

ராமதுரை மெல்லச் சிரித்தான். ''ஓ...... நான் உன்னைக் காப்பாற்றியது குற்றமானால் நீயும்தான் அதே குற்றத்தைச் செய்திருக்கிறாய்!'' என்று அலட்சியமாக முணு முணுத்தான் அவன்.

''நான் என்ன குற்றம் செய்தேன்?''

''என்னுடைய முயற்சியில் நீயே முதலில் குறுக்கிட்டாய்.''

''என்ன உளறுகிறீர்கள்?''

'' உண்மையைத்தான் சொல்கிறேன். அதோ அந்த மின்சாரக் கம்பத்தின்மேல் ஏறிய என்னை, உன் அழுகைக் குரல் தடுத்து இறக்கி விட்டது. என்னுடைய முடிவில் நீ அநாவசியமாகக் குறுக்கிட்டு விட்டாய்.''

அவள் அவனை மிகுந்த வியப்புடன் உற்றுப் பார்த்தாள்.

அந்தப் பெண் ஏன் இத்தனை மோசமாகத் தன் வாழ்க்கையை முடித்துக் கொள்ள நினைத்தாள் என்னும் விவரத்தை அவளிடம் கேட்டுத் தெரிந்துகொள்ள அவன் கொஞ்சமும் விரும்ப வில்லை. தனக்கு ஏற்பட்ட கசப்பான அநுபவங்களைப் போலவே அவளுக்கும் ஏற்பட்டிருக்கலாம் என்று எண்ணிக் கொண்டான்.

அவளும் அவனுடைய அந்த மோசமான முயற்சிக்கான காரணத்தைக் கேட்டுக் கொள்ளவில்லை.

எதிர்த் திசையிலிருந்து மீண்டும் வெளிச்சம் தோன்றியது. இன்னொரு ரயில் வண்டி வருகிறது போலும்.

அந்த வெளிச்சத்தில் அவளுடைய முகத்தை நன்றாகப் பார்த்தான் ராமதுரை. ஆகா, அவள்தான் என்ன அழகாக இருக்கிறாள்! இந்த இளமை கொழிக்கும் எழில் பருவத்தை ஒரே நொடியில் வீணாக்கி விடப் பார்த்தாளே!

அவளும் அவன் முகத்தைப் பட்டும் படாததுமாகப் பார்த்தாள். வாலிபத்தின் சகல கம்பீரமும் பொருந்திய இந்த ஆண் மகன், மின்சாரக் கம்பியைத் தொட்டு அரை விநாடியில் அழிந்து போய்விடப் பார்த்தானே, பாவி!

பாலத்தின் மேல் ரயில் வண்டி ஏறியது. ஒரே இடுஇடுப்பு. இடி முழக்கம்.

அந்தப் பெண் எங்கே ரயிலின் முன்பாய்ந்து விடுவாளோ என்று பயந்த ராமதுரை அவளுடைய மெல்லிய கரத்தை இறுகப் பிடித்துக் கொண்டான். அவளும் அதே போல் அவனைத் தடுத்து நிறுத்தும் நோக்கத்தில் தன் முதுகை அவனுடைய மார்பில் சாய்த்துக் கொண்டாள். ஒருவர் மட்டுமே நிற்பதற்குத் தோதான அக் கிராதிக் கட்டத்தில் அவ்விருவரும் நெருக்கியடித்துக்கொண்டு நின்றனர். வண்டி ஓடி மறைந்தது. நேரம் நகர்ந்தது.



''வாசலில் உங்களை யாரோ தேடிக்கிட்டு வந்திருக்கிறாங்க!''

''பார்த்தால் பெரிய மனுஷன் மாதிரி இருக்கா?''

'' இல்லீங்க, உங்க மாதிரிதான் அவரு இருக்காருங்க!''

---

அவனுடைய பிடி தளரவில்லை. அவளும் விலகி நிற்கவில்லை. ரயில்வே கிராஸிங் சிக்னல் கம்பத்தின் சிவப்பு விளக்கு அணைந்து பச்சை ஒளி பளிரிட்டது.

''உன் பெயர் என்ன?''

''வசந்தி.''

''என் பெயர் ராமதுரை! சரி; இன்னொரு வண்டி வருவதற்குள் இந்தப் பாலத்தைக் கடந்து விடலாம்!'' — கரகரத்த குரலில் இவ்வாறு கூறிய அவன் அந்தப் பெண்ணின் கையைப் பிடித்துக் கொண்டே கிராதிக் கட்டத்தை விட்டுப் பாலத்தின் மேல் ஏறி நடந்தான்.

''ஸிலீப்பர் கட்டைகளைப் பார்த்துக் காலை வையுங்கள்; இடறி விடப் போகிறது!'' — இனிய தொனியில் அப்படிச் சொன்னாள் அந்தப் பெண்.

**மா**தம் ஒன்று ஓடிக் கழிந்தபின் இந்தப் பெரிய உலகத்தில் ஒரு சிறிய அதிசயம் நிகழ்ந்தது: ராமதுரையும் வசந்தியும் திருமணம் செய்துகொண்ட நிகழ்ச்சிதான் அது.

இதில் இன்னோர் அதிசயம் என்னவென்றால், ராமதுரையின் தாய் மாமனை தனிகாசலமே அவனுடைய கலியாணத்தை முன்னின்று நடத்தி வைத்தார்! அவர் ஊர் உலகத்துக்குப் பயந்தவர்; அவரது அந்தஸ்தும் கௌரவமும் அவரை அப்படிப் பயந்து நடக்க வைத்திருந்தன!

திருமணமான மூன்று மாதங்கள் வரை அந்த விசித்திரக் காதல் தம்பதி வெகு சுகமாகவே குடும்பம் நடத்தினார்கள். அப்புறம் தான் அவர்கள் வாழ்க்கையில் எதிர்பாராத பிரச்னை ஒன்று தலைதூக்கியது.

வசந்தி குடும்பப் பாங்குள்ள பெண்ணாகத் தான் நடந்து கொண்டாள். ஆயினும் அவளுடைய நடத்தைகளில் சில, ராமதுரைக்குப்

பிடிப்பதில்லை. அவை அப்படியொன்றும் பெரிய தவறுகள் அல்ல; சில்லறைக் குற்றங்கள்தாம். அவற்றை அவன் நாசூக்காக எடுத்துக் காட்டி இலேசாகக் கண்டித்தால் கூடப் போதும்; அவள் உடனே திருத்தி விடுவாள்.

ஆனால் ராமதுரைக்கு அந்தத் தைரியம் வரவில்லை. 'நாம் ஏதாவது சொன்னால் அவள் கோபித்துக் கொண்டு ரயில் தண்டவாளத்தை நாடிப் போய் விடுவாளோ?' — இதுதான் அவனுடைய பயத்துக்குக் காரணம்.

வசந்தியும் தன் கணவனிடம் சில குறைகளைக் கண்டாள். ஆயினும் அவள் அவனைப் போலவே அவற்றை அவனிடம் உரிமையுடன் எடுத்துச் சொல்லித் திருத்தப் பயந்தாள். மின்சாரக் கம்பத்தின் மேல் ஏறத் துணிந்தவன் அவன் என்பதை அவளால் மறந்துவிட முடியுமா?

குடும்பத்தில் நாளுக்குநாள் நேசம் குறைந்து கலகலப்பு மறைந்தது. பேச்சு மட்டுப் பட்டது. சகஜ உறவு மெலிந்தது. வெறுப்பும் சலிப்பும் உள்ளூறப் புரையோடி வளர்ந்தன.

இந்த உட்புழுக்கத்தை அதிக நாட்கள் சகித்துக் கொள்ள ராமதுரையால் முடியவில்லை. முன்போலவே அவனுக்கு வாழ்க்கை கசந்தது. உயிராசையில் பற்றுக் குறைந்தது. அவன் திடீரென்று ஒரு நாள் அந்தப் பழைய முடிவுக்கே வந்து விட்டான்!

அந்த மோசமான முடிவுக்குத் தான் வரக் காரணம் என்ன என்பதை விளக்கித் தன் மனைவிக்கு ஒரு கடிதம் எழுதி அதைத் தபாலில் சேர்த்துவிட்டு, அப்படியே ரயில் பாலத்தை நோக்கிப் போய் விட வேண்டும் என்ற தீர்மானத்துடன் ஒரு நள்ளிரவில் வீட்டை விட்டுக் கிளம்பினான் ராமதுரை. அவனுக்கிருந்த வெறுப்பில் வசந்தி அப்போது என்ன செய்கிறாள், எங்கே இருக்கிறாள் என்பதையும் அவன் கவனிக்கவில்லை.

தெருக்கோடியில் இருந்த தபால்பெட்டியில் கடிதத்தைப் போட்டு விட்டுத் திரும்பிய அவன் திடுக்கிட்டு நின்றான். காரணம், அவனுக்கு முன்னதாகவே இருளில் மறைந்து வந்த வசந்தி ஒரு கடிதத்தைத் தபால் பெட்டியில் போட்டுவிட்டு அவசரமாக வீட்டுக்குப் போய்க் கொண்டிருந்தாள்!

ராமதுரை பயந்துவிட்டான். அவனுக்கு விஷயம் ஒருவாறு விளங்கியது. தன்னுடைய முடிவை மாற்றிக் கொண்டு அவளைப் பின் தொடர்ந்து வீடு போய்ச் சேர்ந்தான். அன்றிரவும் மறு நாளும் அவளை அவன் வெகு ஜாக்கிரதையாகக் கண்காணித்து வந்தான். அதைப் புரிந்து கொண்டுதானோ என்னவோ அவளும் தாற்காலிகமாகத் தன் முடிவைத் தள்ளிப் போட்டு விட்டவள் போல் காணப் பட்டாள்.

அன்று மாலை அவ்விருவர் பெயருக்கும் இரண்டு கடிதங்கள் வந்தன. கணவன் மனைவிக்கு எழுதிய கடிதம் ஒன்று; மனைவி கணவனுக்கு வரைந்த கடிதம் இன்னொன்று. இரண்டு கடிதங்களிலும் ஒரே விஷயம்தான் இருந்தது. குற்றச்சாட்டுக்களும் ஏறத்தாழ ஒரே மாதிரியாகவே இருந்தன!

ராமதுரை இப்போது தன் மனைவியைக் கண்டு மிரளவே ஆரம்பித்து விட்டான். அவளும் அவனைப் பார்த்து நடுநடுங்கினாள். இறுதியில் அவர்கள் ஒரு சமரச முடிவுக்கு வந்தனர் — கொஞ்ச காலத்துக்குக் கணவனும் மனைவியும் தனித்தனியே பிரிந்து வாழ்வது என்ற முடிவுதான் அது!

அடுத்த நாளே வசந்தி தன் தாய் வீட்டுக்குப் புறப்பட்டுப் போய் விட்டாள்.

ஆறு மாத காலத்துக்கு நிம்மதியாக நாட்களை ஓட்டினான் ராமதுரை. அதற்குப்பின் அந்தத் தனிமை வாழ்க்கை அவனுக்குச் சலிப்பை ஊட்டி விட்டது. பிறந்தகம் போன வசந்தியைப் பற்றித் தகவலே இல்லை.

மூன்றும் முறையாக அவன் வாழ்வை வெறுக்கத் தலைப்பட்டான். உயிராசையைத் துறக்க முடிவு செய்தான். இப்போது அந்த முடிவு அவனுக்கு மிக எளிதாகவே வந்து விட்டது. பழக்கப்பட்ட மனம் அல்லவா?

ஒரு நாள் காரியாலயத்திலிருந்து வீடு திரும்பிய உடனேயே திடுதிப்பென்று அந்த ரயில் பாலத்தடிக்குப் போகத் தயாராகி விட்டான்.

அந்தச் சமயம் அவனுக்கு ஒரு தந்தி வந்தது. அதில், 'வசந்திக்குப் போன வாரம் ஓர் ஆண் குழந்தை பிறந்திருக்கிறது; தாயும் சேயும் நலம்' என்று குறிப்பிடப்பட்டிருந்தது.

ராமதுரை திணறிப் போனான். இந்நாள் வரை இல்லாத ஒரு புத்துணர்ச்சியும் புதிய தெம்பும் அவன் மனத்தில் பூத்துக் குலுங்கின. வீட்டுச் சன்னல்களைப் பரக்கத் திறந்து விட்டு வெளியே பார்த்தான்.

வானமும் பூமியும் அழகாகத் தோற்றமளித்தன. பள்ளியிலிருந்து திரும்பிய சிறுவர்கள் உற்சாகமாகக் கோலி விளையாடிக் கொண்டிருந்தனர். நாட்கள் ஓடின.

'என் பிள்ளைகூட வளர்ந்து பள்ளிக்குப் போவான்; போய் வந்ததும் இப்படித்தான் தெருவில் கோலி விளையாடுவான். அவனுக்கு இதைவிட இன்னும் நல்ல விளையாட்டுச் சாமான்கள் வாங்கித் தர வேண்டும். அவனை நன்றாகப் படிக்க வைக்க வேண்டும். நிறையப் படித்தால் பெரிய உத்தியோகத்தில் அமர்வான். கார் வாங்குவான், வீடு வாங்குவான். அப்புறம் அவனுக்கு ஒரு நல்ல பெண்ணைப் பார்த்துத் தடபுடலாகக் கல்யாணம் செய்து வைக்க வேண்டும். அவனுக்குப் பிள்ளை பிறக்கும். அது என் பேரப் பிள்ளை. அதைத் தூக்கி வைத்துக் கொண்டு கொஞ்ச வேண்டும். பிறகு அதையும் படிக்க வைத்து, உத்தியோகத்தில் அமர்த்தி, கல்யாணம் செய்து, அதன் பிள்ளையைத் தூக்கிக் கொஞ்சி......

அடேயப்பா! இதற்கெல்லாம் நான் இன்னும் அதிக வருஷங்கள் வாழவேண்டுமே? வாழத்தான் வேண்டும்! வாழ்ந்தே ஆகவேண்டும்!'

வாசலில் ஒரு டாக்ஸி வந்து நின்றது. கண்களில் ததும்பிய ஆனந்தக் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு வெளியே வந்தான் ராமதுரை. வசந்தி ஓர் அழகிய குழந்தையை அணைத்துத் தூக்கிக் கொண்டு புன்முறுவலுடன் அவனை நோக்கி வந்தாள்!

## உங்களுடைய கேசம் ஆரோக்கியமாகவும் பளபளப்புடனும் விளங்கும்

# பிரில்க்ரீம்

## தடவி நேர்த்தியாக தலையை வாரிக்கொண்டால்!




**பிரில்க்ரீம் மட்டுமே**

* அதிக எண்ணெய்ப்பற்று இல்லாமலும், தாறுமாறாக உரோமம் கலையாமலும் நேர்த்தியாக தலையை வார உங்களுக்கு உதவுகிறது.
* மிகவும் சிக்கனமானது—ஒருமுறை தடவி வாரிக்கொண்டால் நாள் முழுவதும் உங்கள் தலை கலையாது அழகாக தோற்றமளிக்கும்.
* உரோமம் உதிர்ந்து வழுக்கை விழாமல் தடுக்கக்கூடிய, ஆரோக்கியமான உரோம வளர்ச்சியைத் தூண்டக்கூடிய, நேர்த்தியான கலவை வாய்ந்தது.
* உங்களுடைய கேசத்தின் இயற்கையான வண்ணத்தைப் பாதுகாக்கிறது.

**எனவே இனிமேல் பிரில்க்ரீமையே உபயோகியுங்கள்!**

**உலக முழுவதிலும் லக்ஷகணக்கான நேர்த்தியான மனிதர்கள் இதையே உபயோகிக்கிறார்கள்**

BII/F/13/64 TM B

# பொன் விலங்கு

## மணிவண்ணன்

### ஐம்பத்தெட்டாவது அத்தியாயம்

**பா**ரதியின் ஜுரம் ஜன்னி கண்டு பிதற்றுகிற எல்லை வரை வளர்வதும், குறைவதுமாகப் பத்துப் பதினைந்து நாட்கள் அவளை வாட்டி எடுத்து விட்டது. தாய் தன் அருமை மகளைக் கவனிப்பது போலவும் அன்புத் தமக்கை தன் பிரியமுள்ள தங்கையைப் பேணி உபசரிப்பது போலவும் பாரதி உடல்நலமின்றிப் படுக்கையில் கிடந்த நாட்களில் இரவு பகலாகத் தூக்கம் விழித்து ஓடியாடி அவளுக்குப் பணிவிடை செய்தாள் மோகினி. சிறு வயதிலேயே தாயன்பை இழந்திருந்த பாரதி மோகினியின் சில நாள் பணிவிடையிலேயே அதை உணர்ந்தாள். பார்க்கும் கண்களை அப்படியே இழுத்து நிறுத்தித் தன் மேல் நிலைக்க வைக்கும் மோகினியின் உடல் வனப்பும், அந்த வனப்பை உறுதிப்படுத்திச் சாட்சி சொல்வது போல் அவளிடம் அமைந்திருந்த நாட்டியக் கலைத் திறனும் தான் இதுவரை பாரதிக்குத் தெரிந்திருந்தவை. இப்போதோ உடல் வனப்புக்கும், கலைத் திறனுக்கும் அப்பால் மோகினியின் மிக உயர்ந்த மனப் பண்பும் அவளுக்குத் தெரிந்து விட்டது. அந்த மனத்தில் கருணையும், பரிவும் நிறைந்துள்ளதை அவள் அநுபவபூர்வமாகப் புரிந்து கொண்டு விட்டாள். உடம்பின் வனப்பைக் காட்டிலும் பன்மடங்கு அதிகமாக மனத்தின் வனப்பை அவள் பெற்றிருக்கிறாள் என்பதை உணர்ந்த போது பாரதியால் அவள் மேல் எந்தக் காரணத்துக்காகவும் பொறாமைப்பட முடியவில்லை. சத்தியமூர்த்தியின் மனத்தை வென்று அவருக்கு ஆட்பட்டு, மோகினியால் அவருடைய அன்பைப் பெற முடிந்ததற்காகப் பெருமைப்பட்டு அந்தப் பெருமையோடு தன் ஆற்றாமையையும் நினைத்து உள்ளுருக முடிந்ததே தவிரப் பாரதியால் அவள் மேல் குரோதமடைய இயலவில்லை. மோகினியிடம் அமைந்திருந்த இணையிலாப் பேரெழிலும் கலைத் திறனும் பாரதிக்கு அவள் மேல் குன்றாத பயபக்தியை உண்டாக்கியிருந்தாலும் அவளிடம் சூது வாதும், கள்ளங் கபடு மிகுந்த உலகியல் அறிவும் சிறிதும் இல்லாததால் அவள் இன்னும் ஒரு பேதையாகவே இருக்கிறாள் என்பதைப் பாரதி புரிந்து கொண்டிருந்தாள். பாரதி உடல்நலமின்றிப் படுக்கையில் கிட பத்துப் பதினைந்து நாட்களில் தேவ யான போது டாக்டருக்குப் ஃபோ செய்து வரவழைப்பது தவிர ம நேரங்களில் அன்பும் பரிவும், பாசமு மிகுந்த ஒரு நர்ஸ் போலவே மோகி உடனிருந்து கவனித்ததன் காரணம அவளும் பாரதியும் மனம் விட்டுப் ப நேர்ந்திருந்தது.



அப்படிப் பழக நேர்ந்த வேளைகளிலும்கூட மோகினி தன்னை ஒரு பேதையாகவே அவளிடம் நிரூபித்துக் கொண்டிருக்கிறாள். ஆனால் அதே சமயத்தில் பாரதியோ உலகியல் அறிவோடு ஒட்டிய சூது வாதும், கள்ளங் கபடும் நிறைந்த புத்திசாலிப் பெண்ணாகத் தன்னையும் தன் உணர்வுகளையும் மறைத்துக் கொண்டு மோகினியிடம் பழகியிருக்கிறாள். மோகினிக்காகச் சத்தியமூர்த்தியிடம் கடிதம் கொண்டு போய்க் கொடுக்க நேர்ந்து அதனால் மன நலமும், உடல் நலமும் குன்றிப் போய்ப் பாரதி கல்லூரியிலிருந்து பகலிலேயே வீடு திரும்ப நேர்ந்த தினத்தன்று இரவில் அவளும் மோகினியும் தங்களுக்குள் சத்தியமூர்த்தியைப் பற்றிப் பேசிக் கொள்வதற்கு வாய்த்த பாரதி உடல் நலங் குன்றிச் சே வோடு வீடு திரும்பியிருந்ததனால் இ பிய உடனேயே, "அந்தக் கடிதத் அவரிடம் கொடுத்தாயா, பாரதி? ப

'ப் பார்த்த பின்பு அவருடைய முகத்
ல் மலர்ச்சியிருந்ததா? அல்லது கோபம்
தரிந்ததா? என்னிடம் தெரிவிக்கச்
சால்லி அவர் ஏதாவது பதில் கூறி
னுப்பினாரா, இல்லையா?'' என்றெல்
ாம் அவளிடம் கேட்க நினைத்திருந்தும்
ாகினியால் அப்போதிருந்த நிலைமை
ல் ஒன்றுமே கேட்க முடியவில்லை.
ளர்ந்து போய்ப் பாதிக் கல்லூரியி
லயே வீடு திரும்பிவிட்ட பெண்
ரிடம், தான் கொடுத்தனுப்பிய கடி
த்தையும், அதைப் படித்ததும் அவர்
ன்ன கூறினார் என்பதையுமே உட
'டியாக ஆவலோடு விசாரித்துக்
காண்டு நிற்பது நன்றாயிராது என்று
ண்ணியே மோகினி தன் ஆசையை
'டக்கிக் கொண்டாள். 'அவரை
றையிலேயே போய்ப் பார்த்து
ந்தக் கடிதத்தைக் கொடுத்தாச்சு
க்கா!' என்று பாரதியே கல்லூரியி
லிருந்து திரும்பி வந்ததும் வராதது
மாகத் தானாகவே கூறத் தொடங்கிய
போது கூட, 'கடிதத்தைப் பற்றி
இப்போ என்ன வந்ததம்மா?' என்று
மோகினி அதைத் தெரிந்து கொள்
வதில் மட்டுமே அப்போது தனக்கு அக்
கறையில்லை என்பது போல் நடித்து
மறுக்க வேண்டியிருந்தது. அதே தினம்
மாலையில் பாரதிக்குக் கடுமையான
ஜுரம் வந்து விட்டதனால் மோகினி
டாக்டரை உடனே அழைத்து வரச்
சொல்லி டிரைவர் முத்தையாவை
அனுப்பினாள். டாக்டர் வந்தார். பார்த்
தார். ஓர் இன்ஜெக்ஷன் போட்டு விட்டு
மேலும் ஏதேதோ மருந்துகளை எழு
திக் கொடுத்து விட்டுப் போனார்.
அதன்பின்பு இரவு எட்டு மணிக்குக்
கண்ணாயிரம் வந்து சமையற்காரர்
எங்கோ வெளியில் போய் இருப்ப
தாகவும் ஜமீன்தாருக்குக் 'குளு
கோஸ்' கரைத்துக் கொடுக்க
வேண்டுமென்றும் மோகினி
யிடம் அவன் அதற்குச் சம்ம



திக்காமல் போய் விடுவாளோ என்ற பயத்தோடு பயமாகத் தயங்கியபடியே வேண்டினர். ''ஏன் நீங்களே கரைத்துக் கொடுக்கலாமே?'' என்று மோகினி வேண்டா வெறுப்பாகக் கண்ணுயிரத்தைக் கேட்ட போது, ''நானே கரைச்சுக் கொடுக்கத் தெரியாமே உன்னைக் கூப்பிடறதுக்கு இங்கே வந்து நிற்கலே.. நான் கொடுக்கிறேன் அல்லது பக்கத்திலேயே நாய் மாதிரி நிற்கிறனே அந்தக் கணக்குப் பிள்ளைக் கிழவன் அவனைக் கரைச்சுக் கொடுக்கச் சொல்றேன். வேறு யாரும் ஆளில்லாமல் உங்கிட்ட வந்து கெஞ்சலே. ஜமீன்தார் உடம்புக்குச் சுகமில்லாமல் படுத்தப்புறம் நீ அவர் பக்கம் எட்டிப் பார்க்கவேஇல்லே. அவரிட்ட ஆறுதலா ரெண்டு வார்த்தை விசாரிக்கக் கூட இல்லே..... அவர் உன் மேலே ரொம்பக் கோபமா யிருக்காரு. அதுனலேதான் சொன்னேன். உன் கையாலே நீயே குளுகோஸ் கரைச்சு எடுத்துக்கிட்டுப் போனியானு அவருடைய கோபம் தணியும்—'' என்று

**பொன் விலங்கு**

**பலரிடம் வாழ்க்கையின் அந்தரங்கங்களைச் சொல்ல முடியாததைப் போல் சிலரிடமாவது அவற்றைச் சொல்லாமலிருக்கவும் முடியாது**

கண்ணுயிரம் பதில் கூறினர். தான் ஜமீன்தாருக்குக் குளுகோஸ் கரைத்துக் கொடுக்க மறுத்தால் அந்த வேலையைத் தன் உயிர் அன்பராகிய சத்தியமூர்த்தியின் தந்தையிடம் சுமத்தித் தான் மறுத்த கோபமும் உடன்சேர அந்த அப்பாவிக் கிழவரை அவர்கள் விரட்டு விரட்டென்று விரட்டப் போகிருர்களே என்ற எண்ணத்தினல் மறு பேச்சுப் பேசாமல் ஜமீன்தாருடைய அறையில் போய் அவருக்குக் குளுகோஸ் கரைத்துக் கொடுத்தாள் மோகினி. ''மோகினி! ஒரு நிமிஷம் நில்லு! உங்கிட்ட கொஞ்சம் பேசணும்.... உன்னைப் பார்த்ததாலேயே எனக்கு உடம்பு தேறிடும் போலே யிருக்கு'' என்று பல்லிளிக்கத் தொடங்கிய ஜமீன்தாரிடம், ''பாரதி காலேஜுக்குப் போயி உடம்புக்கு இழுத்து விட்டுக்கிட்டு வந்திருக்கா... நான் அவளைக் கவனிக்கணும்'' என்று கூறிக் கடுமையாக மறுத்து விட்டுத் திரும்பினள் மோகினி. கண்ணுயிரம் சிறிது நேரத்தில் எங்கோ வெளியே புறப்பட்டுப் போய் விட்டார். ஜமீன்தாருக்கு இரவில் சாப்பாடு இல்லை. ஓட்ஸ் கஞ்சி போட்டு அவருடைய அறையில் கொண்டு போய்க் கொடுத்தாயிற்று. சமையற்காரர் இல்லாததால் தானகவே எடுத்துப் போட்டுக்கொண்டு சாப்பிடவும் முடியாமல், யாரிடமும் கேட்கவும் கூசிக்கொண்டு அந்த இரவில் சத்தியமூர்த்தியின் தந்தை தவிப்பதை மோகினி குறிப்பாகப் புரிந்து கொண்டாள். மோகினி தன் மனத்தினுள்ளே அரும்பி யிருக்கும் ஓர் அந்தரங்கமான பற்றுதலுடன் தானே இலையை எடுத்துப் போட்டுப் பரிமாறி விட்டு அந்தக் கிழவரைச் சாப்பிட உட்காருமாறு அழைத்தபோது அவர் கூச்சமும் பயமுமாகத் தயங்கினர்.

''உங்களுக்கு எதுக்கம்மா இந்தச் சிரமம்? நீங்க ஜமீன்தார் ஐயாவைக் கவனியுங்க..... யாராவது வேலைக்காரங்க வந்தப்புறம் நான் ஒரு வாய் கேட்டுச் சாப்பிட்டுக்கிட்டாப்போகுது'' என்று பதறினர் அவர். 'என் அன்பரின் தந்தைக்கு நானே இலை போட்டுப் பரிமாறப் போகிறேன்' என்ற பெருமிதத்தோடு அவரை வற்புறுத்தி இலையில் உட்காரச் செய்து மேலும் தொடர்ந்து பரிமாறினள் மோகினி. 'ஜமீன்தார் வலிந்து கூப்பிட்டனுப்பினலும் அவர் உடல் நலமின்றிப் படுத்த படுக்கையா யிருக்கும் அறைக்குள் எட்டிப் பார்க்கக் கூட மறுத்து வெறுப்பும் அலட்சியமும் காட்டுகிற இந்தப் பெண் இன்று இருந்தாற் போலிருந்து திடீரென்று — நம்மை மட்டும் வற்புறுத்தி அழைத்து இலை போட்டுப் பிரியத்தோடு பரிமாறுகிற காரணம் என்ன?' என்று புரியாமல் பயம் கலந்த மகிழ்ச்சியோடு அமர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தார் அந்தக் கிழவர். அவருக்குப் பரிமாறி முடித்ததும் 'தானும் ஏதோ சாப்பிட்டோம்' என்று பேர் செய்தபின் பாரதிக்காகக் கஞ்சியை எடுத்துக் கொண்டு அவள் அறைக்குள் போனள் மோகினி. கஞ்சியை ஆற்றிக் கொண்டே பாரதியிடம் மெல்லப் பேச்சுக் கொடுத்தாள் அவள்:—

''கடிதத்தை அவர் படித்துப் பார்த்தாரா பாரதி?''

''அவர் உங்கள் கடிதத்தைப் படித்துப் பார்க்கத் தொடங்குகிற வரை நானும் அவரோடு கூட இருந்தேன் அக்கா! அப்புறம் எனக்குக் காலேஜுக்கு நேரமாகி விட்டதால் — கடைசிவரை காத்திருந்து அவர் என்ன பதில் சொல்லுகிறரென்று கேட்டுக் கொண்டு வர

பருத்தி
ஆடைகளில்
சிறந்தவை தேவையா?



இந்த
அடையாளத்தைப்
பார்த்து
வாங்குங்கள்.

சுருக்கம் அற்ற
பருத்தி ஃப்ராக்குகள்
கண்ணுக்கினிய
புடவைகள் தவிர
புதுமைக் கருக்கு
நீடித்திருக்க
இவை சிறந்தவை.
வாங்குங்கள் ...

**ராஜேஷ்**
**டெக்ஸ்டைல்ஸ்**
ஒவ்வொரு தடவையும்!

**ராஜேஷ்**
**டெக்ஸ்டைல்**
**மில்ஸ் லிட்.,**
பெர்குஸன் ரோட் பம்பாய்-13.

# 'கூந்தலின் எழிலை எடுத்துக் காட்டுகிறது

# ஸ்வஸ்திக் பர்ப்யூம்ட் காஸ்டர் ஆயில்

கூந்தலை மழமழப்பாகவும் கவர்ச்சியாகவும் ஆக்குகிறது





ஸ்வஸ்திக் ஹேர் ஸ்டைல் 'மயூர்'

சிறிதளவு ஸ்வஸ்திக் பர்ப்யூம்ட் காஸ்டர் ஆயிலைத் தடவி, கூந்தலை வாரி மூன்று கால்களாக்கிக்கொண்டு நடுப்பாகத்தைச் சுழற்றி ஒரு பக்கமாகச் சாய்த்துக் கொண்டை போடவும். இரு பகுதிகளையும், எதிரும் புதிருமாகக் கொண்டையைச் சுற்றிச் சொருகிவிடவும். பொருத்தமான அணிகளினால் கொண்டையை அலங்கரித்துக்கொள்ளவும்.

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிமிடெட், பம்பாய்.



**வீட்டு எஜமானி:** அப்பப்பா! நீ சமையலறையில் போடுகிற டமார் டபார் சப்தத்தை என்னால் தாங்க முடியவில்லை...!

**சமையல் வேலை செய்பவள்:** என்னடிம்மா இது அதிசயமா இருக்கு. ஒரு பெரிய ஜாடி கீழே விழுந்து உடைந்தால் சப்தம் வராதோ? எங்கே நீங்க சப்தம் போடாமல் ஒரு ஜாடியை உடையுங்கோ, பார்த்து விடலாம்!

முடியவில்லை'' என்று தன் உணர்வுகளைக் கட்டுப்படுத்திக் கொண்டு மறுமொழி கூறினாள் பாரதி. அவள் தன் உணர்ச்சிகளை மறைத்துக் கொண்டு நடித்த அதே வேளையில் மோகினி தன் அந்தரங்கமான உணர்ச்சிகளையெல்லாம் ஒன்று விடாமல் அவளிடம் கொட்டத் தொடங்கினாள். பாரதி அவற்றையெல்லாம் ஏற்கெனவே மோகினி தன்னிடம் சத்தியமூர்த்திக்காகக் கொடுத்தனுப்பிய கடிதத்தில் படித்துப் புரிந்து கொண்டிருந்தாலும் இப்போதுதான் புதிதாகக் கேட்டுத் தெரிந்து கொள்கிறவளைப் போல மிகவும் ஆர்வத்தோடு கேட்கத் தொடங்கினாள். மனித மனத்தின் பலவீனமான வேளைகளில் இப்படிப் பட்ட வேளையும் ஒன்றாகும். பலரிடம் வாழ்க்கையின் அந்தரங்கங்களைச் சொல்ல முடியாததைப் போல் சிலரிடமாவது அவற்றைச் சொல்லாமலிருக்கவும் முடியாது. பாரதியை மனப் பூர்வமாக நம்பி அவளிடம் தன் வாழ்க்கையின் அந்தரங்கங்களையெல்லாம் சொல்லி விட வேண்டும் என்று அந்த விநாடியில் தன்னுள் பொங்கி எழும் உணர்ச்சி வேகத்தைத் தடுத்துக் கொள்ள முடியாமல் எல்லாவற்றையும் அவளிடம் சொல்லிக் கொண்டிருந்தாள் மோகினி. மோகினி கூறுவதைக் கேட்கக் கேட்கப் பாரதிக்குக் கண்கள் கலங்கின. பாவம்! பேதை மோகினி அப்போது தான் சொல்லிக் கொண்டிருந்த சோக மயமான சுயசரிதத்தையும், தான் சத்தியமூர்த்திக்கு ஆட்பட்டதையும் கேட்டு இளகிய சுபாவமுள்ளவளாகிய பாரதி சும்மா கண் கலங்கி அழுகிறாள் என்று மட்டும் தான் நினைத்துக் கொண்டாள். ஆனால் அவளுடைய கலக்கத்தில் சொந்தக் காதலில் ஏமாறிய ஏமாற்றமும் தோல்வியும் இருப்பதைப் பேதையான மோகினியால் ஒரு சிறிதும் புரிந்து கொள்ள முடியவில்லை.

''என் கதை இதுதான் பாரதி! நான் இந்த ஊருக்கு வந்த புதிதில் நீகூட ஒரு நாள் என்னைப் புரிந்து கொள்ளாமல் ஏதேதோ பேசினாய்! 'ஜமீன்தார் 'உங்களுக்குக்கூட' இதெல்லாம் சொல்வதில்லையா அக்கா?' என்று ஜமீன்தாரும் நானும் ரொம்ப நெருக்கமாக இருக்கிறாற் போல நீயாக நினைத்துக்கொண்டு கூறிய போது நான் திகைத்தேன். ஏதோ எங்கள் குடும்பம் என்றோ ஜமீன் உப்பைத் தின்று வளர்ந்திருக்கிறது என்ற நன்றியினாலும் இந்தக் கொடிய ஜமீன்தாரிடமுள்ள பயத்தினாலும் நான் சில சமயங்களில் இவர்களுக்கு அஞ்சிக் கட்டுப்படுகிறேன். என் மனம் வேறு எங்கே இருக்கிறதென்று இப்போதாவது நீ தெரிந்து கொண்டிருப்பாய் பாரதி!'' என்று மோகினி உருக்கமாகக் கூறி முடித்தாள். அவள் இவற்றையெல்லாம் கூறி முடித்தபின் சிறிது நேரம் பாரதிக்கும் அவளுக்குமிடையே பேச்சில்லாததோர் மௌனம் நிலவியது. இருவருக்குள்ளேயுமோ மௌனமில்லாத நினைப்பேச்சுக்கள் ஆயிரமாயிரமாகக் குமுறிக் கொண்டிருந்தன. இருவருக்குமிடையே வெளிப்படையாக நிலவிய மௌனமே இருவருள்ளேயும் குமுறும் மனத்தின் பேச்சுக்களை ஒருவிதத்தில் அளவிட்டுக் காட்டுவதாக இருந்தது. அந்த மௌனத்தைக் கலைத்து விட்டுப் பாரதி தான் முதலில் பேசத் தொடங்கினாள்:

''அக்கா! நீங்கள் பாக்கியசாலி...'' என்று இருந்தாற் போலிருந்து அழுகை தயங்கும் குரலில் மோகினியிடம் கூறினாள் பாரதி. கூறிவிட்டு அசையாமல் மோகினியின் முகத்தையும் அப்போது கூர்ந்து கவனித்தாள் அவள்.

''ஏன் அப்படிச் சொல்கிறாய்? என்னிடம் இன்று திடீரென்று என்ன பாக்கியத்தைக் கண்டு விட்டாய் பாரதி?''

''தகுந்த காரணத்தோடுதான் சொல்கிறேன் அக்கா! நீங்கள் நிச்சயமாகப் பெரிய பாக்கியசாலி! பாக்கியசாலிக

ணால்தான் காதலில் ஜெயிக்க முடி கிறது. துர்ப்பாக்கியசாலிகள் அநேக மாக எப்படியாவது தோற்றுப் போய் விடுகிறார்கள்.....''

''இருக்கலாம்! ஆனால் என்னுடைய பாக்கியமோ அல்லது துர்ப்பாக்கியமோ இன்னும் தீர்மானமாக முடிவாகவில் லேயே அம்மா? என்னுடைய சகல சௌபாக்கியங்களும் அவர் ஒருவர் தான்! அவரோ என்னிடமிருந்து வெகு தொலைவில் விலகியிருக்கிறார். அவருக்குக் கெடுதல் செய்து அவரை இந்தக் கல் லூரியிலிருந்தே வெளியேற்றித் துரத்தி அனுப்பி விட வேண்டும் என்று சூழ்ச்சி செய்கிறவர்கள் யாரோ அவர்களுக்கே இந்தக் கையால் இங்கே குளுகோஸ் கரைத்துக் கொடுத்துக் கொண்டிருக் கிறேனே நான்? என்னுடைய இந்தப் பாவத்துக்கு விடிவு ஏது? அவருடைய பாதங்களை இந்தக் கண்களால் அருகில் நின்று ஒருமுறை பார்க்கவும் முடியாத கொடும் பாவியாகி விட்டேனே நான்?''

''கவலைப்படாதீர்கள் அக்கா! உங் களுடைய சௌபாக்கியத்தை உங்க ளுக்கு மிக அருகில் வரவழைக்கிறேன் நான். நீங்களே அவரைத் தேடிக் கொண்டு பார்க்கப் போனால் இந்த ஜமீன்தாரும் கண்ணாயிரமும் உங் களைக் கொன்று போட்டு விடுவார்கள். அதனால் என் தோழி மகேசுவரியிடம் நானே சொல்லியனுப்பிச் சத்தியமூர்த்தி சாரை இன்னும் இரண்டு மூன்று நாளில் இங்கு இந்த வீட்டுக்கு வரவழைக்கிறேன். தன் மாணவியாகிய என்னைப் பார்த்து விட்டுப் போக வருவது போல் இங்கு வருவார் அவர். அப்போது நீங்கள் அவரைக் கண் குளிர உங்களுக்கு மிக அருகில் பார்க்கலாம். பேசலாம். உங்கள் கடிதத்தைப் பற்றியும் விசாரிக் கலாம்....''

''இந்தப் பாவிகள் இருக்கிற நரகத் துக்கு அவர் வருவாரா பாரதி?''

''கட்டாயம் வருவார்! வரச் செய் வது என் பொறுப்பு அக்கா! கல்லூரியி லேயே மாணவ மாணவிகளிடம் அன்பும் கருணையும் நிறைந்த விரிவுரை யாளர் அவர் ஒருவர்தான் அக்கா! அன்று தமிழ் வகுப்பில் நான் உடல் நல மில்லாமல் சோர்ந்து காணப்பட்ட போதுகூட அவராகவேதான் பரிவோடு என்னைப் பார்த்து 'வீட்டுக்குப் போய் ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள்' என்று சொல்லி அனுப்பினார். அப்படிப்பட்ட வர் நான் என் உடல் நிலையைச் சொல்லி யனுப்பினால் ஒரு முறைக்கு விசாரித் துப் போவதற்காகவாவது நிச்சயம் வருவார்.....''

பாரதி இப்படிக் கூறிக் கொண் டிருக்கும் போதே மோகினி மனக் கண் களில் சத்தியமூர்த்தி அங்கு வருவது போலவும் பாரதியின் அறையில் நுழைந்து தன் மாணவியாகிய அவ ளுடைய உடல் நலனை விசாரிப்பது போலவும் அப்போது தான் காப்பி யோடு அந்த அறைக்குள் புகுந்து அவ ரைத் திகைக்க வைப்பது போலவும் உல்லாசமாகத் தனக்குத்தானே கற்பனை செய்யத் தொடங்கி விட்டாள்.

பாரதியின் குரல் குறுக்கிட்டு அந்த வேளையில் அவள் கற்பனைகளைத் தடை செய்திரா விட்டால் அவள் கனவுல குக்கே போயிருப்பாள்.

''அக்கா! இந்தப் பாட்டை நீங்கள் படித்திருக்கிறீர்களா? எத்தனை சோக மாகப் பாடியிருக்கிறார் பாருங்கள்? காதலில் தோல்வியடைந்தவர்களின் நினைவைச் சித்திரிப்பதாக இந்தப் பாட்டை நவநீத கவி பாடியிருக்கிறார்! சத்தியமூர்த்திசாருடைய தமிழ் வகுப் புச் சொற்பொழிவுகளுக்கு அடுத்தபடி யாக எனக்குப் பிடித்தவை இந்தக் கவிஞரின் உணர்ச்சி மயமான பாடல் கள்தான்! இதோ இந்தப் பாட்டைக் கொஞ்சம் பாருங்களேன். சொல்கி றேன்'' என்று பக்கத்து ஸ்டூலில், மருந்துப் பாட்டில்களோடும் அவுன்ஸ் கிளாஸோடும் நடுவே கிடந்த கவிதைத் தொகுதி ஒன்றை எடுத்து அடையாள மாக அதில் ஒரு பக்கத்தைப் பிரித்து மோகினியிடம் நீட்டினாள் பாரதி. மோகினி அந்தப் பாடலை வாய் விட்டுப் பாடினாள்.

**முன்னும் பின்னும் நினைவாகி — அது**
**முடிவிற் பெரிய கனவாகி**
**நீயும் நானும் கதையாகி — நம்**
**கதையும் உலகிற் செலவாகிக்**
**காலப் படுக்கை யதன்மேலே — முன்**
**கழிந்த நினைவுகள் கண்ணயர**
**அழிந்த நினைவுகள் கண்கலங்க — மனம்**
**அங்கும் இங்கும் அலைபாயும்...''**

...இந்தப் பாடலை மோகினி தன் னுடைய இனிய குரலில் ஓரளவு நன்று கவே பாடி முடித்தவுடன் தன்னுடைய உணர்வுகளைக் கட்டுப்படுத்த முடியாமல் பாரதிக்கு அழுகை குமுறி வெடித்துக் கொண்டு வந்து விட்டது.

''பாட்டு ரொம்பவும் உருக்கமாகத் தான் இருக்கிறது! அதற்காக நீ ஏன் இப்படி அழுகிறாய் பெண்ணே? சில பேருக்குச் சினிமாப் படத்தில் துன்பப் படுகிற காட்சிகளைப் பார்த்தால்கூட அழுகை வந்து விடும். அதைப் போல நீயும் பச்சைக் குழந்தை மாதிரி இருக்

ஆறு மாதங்களுக்கு முன், மாலதியின் கணவர் பாம்பு கடித்து காலமாகிவிட்டார். ஒவ்வொரு மாதமும் தபால்காரர் மூலம் அவளுக்கு மணிஆர்டர் ஒன்று வந்து கொண்டிருந்தது.






"ஐயா, தபால்காரரே! மாலதிக்கு பணம் அனுப்பிக் கொண்டி-ருப்பது யார்?"

"லைப் இன்சூரன்சுக் கார்ப்பொரேஷன்"

"எப்படி?"




மாலதியின் கணவர் ரூ 5000 க்கு மல்டி பர்பபஸ் பாலிஸி எனப்படும் ஆயுள் இன்சூரன்சு பாலிஸி ஒன்று எடுத்திருந்தார். அவர் இறந்ததும் அவளுக்கு ரூ 500 கிடைத்தது இரண்டு ஆண்டுகளுக்கு ரூ 100 மாதந்தோறும் அவளுக்கு கிடைக்கும். பிறகு ஒவ்வொரு மாதமும் ரூ 50 வீதம் 18 ஆண்டுகளுக்கும் கிடைக்கும். இதற்கு பின் ரூ 4,500 போனஸுடன் அவளுக்குக் கிடைக்கும்.



"யார் வேண்டுமானாலும் இந்தப்பாலிஸி எடுத்துக்கொள்ளலாமா?"

"ஆமாம், ஆனால் பாலிஸி எடுப்பவர் மணமானவராக இருப்பதுடன் நல்ல உடல் நலத்துள்ளவராகவும் இருக்க வேண்டும்"

கிறாயே அம்மா? பாட்டு நன்றாயிருக்கிறதென்றால் அதுக்குக்கூட இப்படி ஒரு அழுகையா ?'' என்று பாரதியின் உள் மனம் புரியாமல் மோகினி அவளைப் பேதையாக நினைத்துக் கொண்டு அந்தப் பேதைமையைப் புகழவும் தொடங்கி விட்டாள். ஆனால் உண்மையில் மோகினிதான் அப்போது அசல் பேதையாக நடந்து கொண்டிருந்தாள். அதன்பின்பு ஒவ்வொரு நாளும் இப்படி. இருவருக்குமிடையே ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளாமல் மர்மமாக எத்தனையோ சம்பவங்கள் நிகழ்ந்தன. மோகினி தன் வாழ்க்கையில் பாரதிக்குச் சொல்ல இனி ஒன்றும் மீதமில்லை என்பது போல் ஒவ்வொரு நாளும் அவளிடம் மனம் விட்டுப் பழகி எல்லாவற்றையும் ஒவ்வொன்றாக அவளுக்குச் சொல்லிக் கொண்டிருந்தாள். பாரதியும் கண் கலங்கி அழுவது போல் உணர்ச்சி வசப்பட்டு அவற்றைக் கேட்பது வழக்கமாகியிருந்தது. பாரதி ஜுரமாகப் படுத்த பதின்மூன்றாவது நாளோ பதினான்காவது நாளோ, ''அக்கா! இன்று மாலையில் கல்லூரி விட்டதும் சத்தியமூர்த்தி சார் என்னைப் பார்த்து விசாரிப்பதற்கு இங்கே வருவதாகச் சொல்லியிருக்கிறாராம். நேற்று இங்கே வந்திருந்த மகேசுவரி தங்கரத்தினத்திடம் நான் அவருக்குச் சொல்லியனுப்பினேன். அவர் இன்று இங்கே வர ஒப்புக் கொண்டிருப்பதாக அவள் சற்று முன்புதான் ஃபோனில் கூறினாள். நீங்கள் அவரைச் சந்திக்கத் தயாராயிருக்க வேண்டும்'' — என்று மகிழ்ச்சி மிக்க செய்தியைத் தெரிவித்தாள். இதைக் கேட்டு மோகினியின் மகிழ்ச்சியும் ஆவலும் எல்லையற்றுப் பெருகின. ஆர்வம் ,பொங்கும் மனத்தோடு மாலை வேளையை எதிர்பார்த்துக் காத்திருந்தாள் அவள்.

ஒரு நாளுமில்லாத திருநாளாக அன்று ஜமீன்தாருக்கு உடல்நிலை தேறி மாலையில் பங்களாவின் முன் வராந்தாவில் சாய்வு நாற்காலியை எடுத்துப் போடச் சொல்லிச் சாய்ந்து கொண்டிருந்தார். சத்தியமூர்த்தி அங்கு வரப்போவதாகப் பாரதி சொல்லியிருந்த நேரம் ஆகிவிடவே அவரைப் பார்க்கும் ஆவலை அடக்க முடியாமல் வாயிற்புறமாக அவர் அங்கு வருகிறாரா என்று பார்க்க வந்த மோகினியைத் தற்செயலாக அங்கு சாய்வு நாற்காலியில் சாய்ந்திருந்த ஜமீன்தார் பார்த்து விட்டார்:

''மோகீ! உடம்பு இன்னிக்குக் கொஞ்சம் தேவலை! உன் கையாலே காப்பி கலந்து கொண்டாயேன்....'' என்று ஜமீன்தார் அப்போது வேண்டிக் கொண்




**பின்னால் ஒருவர்...** இவர் சின்ன வயசிலே என்னிடம்தான் படித்தார்... ஒன்று, இரண்டு, மூன்று வரையில்தான் எண்ணத் தெரியும்... இவன் பெரியவனானால் என்ன செய்யப் போகிறானோ என்று இருந்தேன்....!

டதை மறுக்கவும் முடியாமல் விரும்பி அங்கீகரிக்கவும் முடியாமல் மனப் போராட்டத்தோடு உள்ளே சென்ற மோகினி 'கடனே' என்று வெறுப்போடு ட்ரேயில் காப்பியை எடுத்து வந்து சாய்வு நாற்காலியருகே சென்று ஜமீன்தாரிடம் கொடுக்கவும் அதை வாங்கிக் கொண்டு ஜமீன்தார் அவளைப் பார்த்து ஏதோ சொல்லிச் சிரிக்கவும் அதே வேளையில் நேர் எதிரே வாயிற்புறமிருந்து சத்தியமூர்த்தி உள்ளே நுழையவும் சரியாயிருந்தது. நிமிர்ந்து பார்த்த மோகினி எதிரே வந்து நின்ற சத்தியமூர்த்தி தான் ஜமீன்தாருக்கு உபசாரம் செய்து பணிவிடை புரிவதாக எண்ணிக்கொண்டு முகத்தைச் சுளித்து எரித்துவிடுவதுபோல் தன்னை நோக்குவதைக் கண்டு மனம் பதறி நடுங்கினாள். சத்தியமூர்த்தி உள்ளே நுழைந்து வருவதைப் பார்க்க இயலாத நிலையில் ஜமீன்தார் பக்கவாட்டில் நோக்கியபடி சாய்வு நாற்காலில் சாய்ந்து காப்பி அருந்திக் கொண்டிருந்தார். ஆனால் அந்த வேளையில் ஜமீன்தாரையும் அவளையும் அங்கே சேர்த்துப் பார்க்க முடிந்த சத்தியமூர்த்தி அவளை எப்படியோ தவறாகப் புரிந்துகொள்ளும்படி சந்தர்ப்பம் சதி செய்துவிட்டது. **(தொடரும்)**

# பினிக்ஸ் ஆடைகள்

நவநாகரீகக் குறிப்புகளிலே
முதலிடம்பெறுகின்றன.

வாயில்கள் ● பாப்ளின்கள் ● ஸூட்டிங்குகள்



பினிக்ஸ்
மில்ஸ்

ஒரு ரூயா
ஸ்தாபனம்

# குழந்தைகள் கலைக் கூடம்

—துமிலன்

**ப**டிப்புச் சொல்லிக் கொடுப்பதில் புதிய புதிய முறைகளைப் புகுத்துவதைப் பரிகசித்து எச். எம். மன்ரோ என்ற ஆங்கில ஆசிரியர் ஒரு கதை எழுதியிருக்கிறார்.

சரித்திர பாடம் கற்பிக்க ஒரு புது முறை.

உபாத்தியாயர் தாம் டியூஷன் சொல்லிக் கொடுக்கும் வீட்டுப் பையன்களுக்கு இந்த முறைப்படி சொல்லிக் கொடுத்தார் என்று வைத்துக் கொள்ளுங்கள். பாடம் பிருதிவி ராஜனைப் பற்றியது. பையனைக் கூப்பிட்டு, 'நீதான் பிருதிவி என்று வைத்துக் கொள். நீ சம்யுக்தை என்ற ஒரு பெண்ணைத் தூக்கிக் கொண்டு போய்க் கலியாணம் செய்து கொண்டுவிடுகிறாய். இதைச் செய்து காண்பி, பார்க்கலாம்' என்றார். உடனே பையன் தெருப் பக்கம் போனான். பக்கத்து வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்த அந்த வீட்டுப் பெண்ணிடம் சென்று, 'சம்யுக்தை வா' என்று அந்தப் பெண்ணைத் தூக்கிக் கொண்டு ஓடினான். அதைப் பார்த்துப் பெண்ணின் தாயார் 'ஐய்யோ முறையோ' என்று கத்த ஆரம்பித்து விட்டாள். சரித்திர பாடங்களை அது சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளை நடித்துப் பார்த்துத் தெரிந்துகொண்டு ஞாபகத்தில் வைத்துக் கொள்ளும் முறை இது என்பது அந்த அம்மாளுக்கு எப்படிப் புரியும்?

'குட்ட வேண்டிய பையனுக்குக் குட்டிச் சொல்லிக் கொடு; கிள்ள வேண்டிய பையனுக்குக் கிள்ளிச் சொல்லிக் கொடு; அறைய வேண்டிய பையனுக்கு.......'' என்பதுதான் உபாத்தியாயரின் கை கண்ட போதனா முறையாக இருந்தது.

இப்போது இந்தமுறையெல்லாம் பழைய காலக் கதையாகப் போய் விட்டது. குழந்தைகளுக்கு எடுத்த எடுப்பிலேயே நேரடியாக எழுத்துக்களைச் சொல்லிக் கொடுப்பதில்லை. எழுத்துக்கள் உள்ள படம், எழுத்துக்கள் பொறிக்கப்பட்டிருக்கும் காகித அட்டைகள், மரக்கட்டைகள் இவற்றைக் கொடுத்து விளையாடச் சொல்கிறார்கள். குழந்தைகளுக்கு எழுத்துடன் பழக்கம் ஏற்பட்டதும் அவை பிறகு தாமாகவே எழுத முயல்கின்றன. குழந்தைகளை அடித்துப் பாடம் சொல்லிக் கொடுக்கும் பழக்கமும் அநேகமாய் நின்று விட்டது. பார்க்கப் போனால் இதிலெல்லாம் அதிசயம் ஒன்றுமில்லை. காலத்துக்கேற்றபடி, அறிவு வளர்ச்சிக்கேற்றபடி போதனா முறைகளும் அபிவிருத்தியாகிக் கொண்டேதானே போகும்? இத்துறையில் அமெரிக்கர்கள் ஏதாவது பரிட்சை செய்து பார்த்துக் கொண்டேயிருக்கிறார்கள். சமீபத்தில் சென்னையில் காண்பிக்கப்பட்ட 'குழந்தைகள் கலைக் கூடம்' ஒரு புதுப் பரிட்சை.

குழந்தைகளின் க்ஷேம நல கௌன்சில், சென்னை ஜூனியர் சேம்பர் இவற்றின் ஆதரவில் தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் இந்தக் கலைக் கூடம் அமைக்கப்பட்டிருக்கிறது.

27–1–64 அன்று நடைபெற்ற அதன் ஆரம்ப விழாவுக்குச் சென்றிருந்தேன். வந்திருந்தவர்களுள் பலர் வயதானவர்கள்; ஸ்திரீகளுட்பட அநேகர் நரைத்த தலையினுடன் காட்சி அளித்தார்கள்!

ஆரம்பித்து வைப்பதற்கு அறிகுறியாக ஒரு குத்துவிளக்கை ஏற்ற ஏற்பாடு செய்திருந்தார்கள். அந்த விளக்கு ஐந்து முகங்கள் உள்ளது. திறந்து வைப்பதற்காக வந்திருந்த சென்னையில் உள்ள அமெரிக்கக் கான்ஸல் ஜெனரல் டாக்டர் ஆல்பர்ட் பி. பிராங்கின் அவர்கள் நெருப்புக்குச்சியைக் கிழித்துத் திரிகளைப் பற்ற வைக்க முயற்சி செய்தார். ஆனால் அணைந்துகொண்டேயிருந்தது. அங்கே காற்று வேறு. விழாவுக்குத் தலைமை வகித்த முதன் மந்திரி தமது ஆசனத்தை விட்டு எழுந்து வந்து விளக்கின் பக்கத்தில் நின்று கொண்டார். உடனே தீக்குச்சிகள் அணைந்து

தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் ஆரம்பமாகியுள்ள குழந்தைகள் கலைக் கூடத்தைச் சென்னை முதன் மந்திரி கனம் பக்தவத்சலம் பார்வையிடுகிறார்.



இந்தியக் குழந்தைகளுக்கு அமெரிக்காவின் வெகுமதியான குழந்தைகள் கலைக்கூடக் கண்காட்சி புது தில்லியில் நடைபெற்றபொழுது ஸ்ரீமதி இந்திரா காந்தி ஒரு குழந்தைக்கு ஒத்தாசை செய்கிருர்.

அங்கே காகிதங்கள் வர்ணங்கள், பிரஷ்கள் கத்திரிக்கோல், பசை இறகு முதலியவை வைக்கப்பட்டிருந்தன.

"இவை எல்லாமும் வேடிக்கை பார்க்கத்தானு? காகிதங்கள் தும்ஷிக் குதிக்குமா?" என்று விசாரித்தேன்.

"இல்லை. இங்கே குழந்தைகள் காகிதங்களில் தாங்களாகவே படம் வரையலாம். இங்கு இருக்கும் உபகரணங்களைக் கொண்டு தங்களுக்குப் பிடித்தமான சாமான்களைச் செய்யலாம்!" என்று பதில் வந்தது.

"முதல் அறையில் இருக்கும் பொருள்களைப் போலவேயா?" என்று ஆச்சரியத்துடன் கேட்டேன்.

போகாமல் திரிகளை எரியச் செய்தன. அந்தத் திக்குச்சிகள் சர்க்கார் ஆதரவில் தயாரிக்கப்படும் 'சுடர்' மார்க்கு தீப்பெட்டிக் குச்சிகள் போலும். முதல் மந்திரி வந்ததும் ஒழுங்காக நடந்து கொண்டு விட்டன!

பிறகு கலைக்கூடத்தைப் பார்க்கச் சென்றோம். அது அலுமினியத்தினுல் ஆனது. அக்கு அக்காகப் பிரித்து விடக் கூடிய பாகங்களைக் கொண்டது. பார்ப்பதற்கு ஒரு கூடாரம் போல் இருக்கிறது. இதை இரண்டு அறைகளாகத் தடுத்திருக்கிருர்கள்.

முதல் அறையில் வேடிக்கையான சாமான்கள் இருக்கின்றன. சில பொம்மைகள் போன்றிருக்கின்றன. ஒன்றிலுள்ள ஒரு பொத்தானை அமிழ்த்தினுல் வெளிச்சம் ஏற்பட்டு நிழல் உருவம் தெரிகிறது. செடி போன்று அமைக்கப்பட்டிருக்கும் ஒரு பொம்மையில் உள்ள பொத்தான்களை அமிழ்த்தி வந்தால் விதம் விதமான வர்ணப் பூக்கள் மாதிரி தெரிகிறது. எல்லாம் மின்சார வெளிச்ச ஏற்பாடுகள்.

இவற்றை யெல்லாம் நான் பரீட்சை பார்த்துக் கொண்டே போனேன். இங்கே ஒரு பொத்தானை அமுக்கினேன்; அங்கொரு பொத்தானை அமுக்கினேன். பூனைத் தோல் மாதிரி இருந்த ஒன்றைத் தடவிக் கொடுத்தேன். அது அமுங்கி அமுங்கிப் புஸ்ஸென்று மேலே கிளம்பிற்று. நான் இப்படி விளையாடிக் கொண்டிருந்த போது அங்கிருந்த ஒருவர் வந்து, "ஸார்! இதெல்லாவற்றையும் குழந்தைகள் மட்டுமே தொட்டு விளையாடலாம். பெரியவர்களுக்கல்ல" என்று தெரிவித்தார். நான், "அப்படியா! நான் எனக்காக இப்போது விளையாடவில்லை. என் பேத்தி, பேரன் சார்பாகத்தான் வேடிக்கை பார்த்தேன்" என்று கூறிவிட்டு அடுத்த அறைக்குச் சென்றேன்.

"இல்லை, இங்கே குழந்தைகள் அவ்வளவு நேர்த்தியாகச் செய்ய முடியுமா? அவர்களால் முடிந்தவரை இங்கேயுள்ள சாதனங்களைக் கொண்டு செய்ய முயல்வார்கள். அவர்கள் விருப்பமானதைத் தாங்களாகவே செய்யும் படி விட்டு விடுவோம். அவசியமானுல் சொல்லிக் கொடுப்போம்!"

"முதல் அறையில் என்னென்னமோ வைத்திருக்கிறீர்களே! அதை எதற்காகப் பார்க்க வேண்டும்?" என்று கேட்டேன்.

"அதுவா? அங்கேயுள்ள பல்வேறு வடிவங்களை யெல்லாம் சிறுவர்கள் கவனிக்கிருர்கள். அவையெல்லாம் அவர்கள் மனத்தில் பதிகின்றன. அதன் பயனுய் அவர்களது கலையுணர்ச்சி தூண்டி விடப்படுகிறது. அவர்கள் கைகளும் எதையாவது சிருஷ்டி செய்யத் துடிக்கின்றன. அந்தப் பக்குவமான நிலைமையில் அவர்கள் இந்த அறைக்கு வந்ததும் இங்குள்ள சாமான்களைக் கொண்டு தாங்களாகவே ஏதாவது செய்யத் தொடங்கி விடுவார்கள்" என்று அந்த நூதன போதனையின் தத்துவத்தை விவரித்துக் கூறினுர்.

இது விக்டர் டி அமிக்கோ என்ற கல்வி நிபுணரின் கலைப் படைப்பு. ஸ்ரீமதி கென்னடி 1962ல் இந்தியாவுக்கு விஜயம் செய்திருந்த போது அதை இந்தியக் குழந்தைகளுக்குப் பரிசாக வழங்கினுர். இந்தக் கலைக்கூடம் மறுபடியும் டில்லிக்குப் போய்ச் சேரும்.

அமெரிக்கக் குழந்தைகள் அதிருஷ்டசாலிகள். அவர்களுடைய கலை உணர்வு, கல்வி, பொது அறிவு இவற்றை வளர்க்க ஏதாவது புதிது புதிதாகச் செய்துகொண்டேயிருக்கிருர்கள் என்று வேடிக்கை பார்த்தவர்கள் சொல்லிக் கொண்டு போனுர்கள்.

ஆனுல் நம்மைப் போன்று குழந்தைகளின் பாட திட்டத்தையும் போதனு மொழியையும் அவர்களுக்கு அடிக்கடி மாற்றிக் கொண்டிருக்கத் தெரியவில்லையே!

THY-52-TAM



ஹமாம் - என் மனதுக்கிசைந்த ஒரே சோப்.




அதிகப்படி புதுமலர்ச்சி அளிப்பது - ஹமாம் - குடும்பத்திற்கான சோப்.

டாடா தயாரிப்பு

## கலை வளர்க்கும் கோயில்கள்

# சேலம் கல்லூரிகள்

**பா**ரதப் பெண்ணின் பண்புகளைப் பற்றி எழுதியிருக்கிறார்கள் பல அறிஞர்கள். அந்தப் பண்புகளே உருவெடுத்து வந்ததுபோல் தம் வாழ்க்கையை அமைத்து வாழ்ந்து காட்டியவர் அன்னை ஸ்ரீ சாரதா தேவியார். இன்றைய நவபாரதப் பெண்களுக்கு உயர் கல்வி அளித்துச் சமூகத்தில் அவர்களுக்குரிய இடத்தைக் கொடுத்து உயர்த்தச் சேலம் நகரில் புதிதாகத் தோன்றியிருக்கும் பெண்கள் கல்லூரிக்கு வெகு பொருத்தமாக அன்னை சாரதா தேவியின் பெயரையே சூட்டியிருக்கிறார்கள்.

வாணிகத்திலும் இரும்பு வளத்திலும் வேகமாக வளர்ந்துவரும் சேலத்தில், பெண்களின் உயர் கல்வியையும் வளரச் செய்ய முனைந்த பெருமை சேலம் அளகாபுரம் பகுதியில் 1956ம் ஆண்டில் தோற்றுவிக்கப்பட்ட ஸ்ரீ சாரதா வித்தியாலயா பெண்கள் உயர்நிலைப் பள்ளியையே சேரும். 1959ம் ஆண்டில் முழு உயர்நிலைப் பள்ளியாக மாறிய அந்த ஸ்தாபனம்தான் 1961ம் ஆண்டில் ஆரம்பிக்கப்பட்ட ஸ்ரீ சாரதா பெண்கள் கல்லூரிக்கு வித்திட்டது. 1962ம் ஆண்டிலேயே பி. ஏ. பொருளாதார வகுப்பும் கல்லூரியில் ஆரம்பமாகிவிட்டது.

இன்று ஏறத்தாழ இருபத்தைந்து ஆசிரியைகளும் முந்நூற்றி ஐம்பது மாணவிகளும் இந்தக் கல்லூரியினால் பயன் பெறுகிறார்கள். திருச்சி, சீதாலட்சுமி ராமஸ்வாமி மகளிர் கல்லூரியில் ஆசிரியையாகப் பணியாற்றி அநுபவம் பெற்ற ஸ்ரீமதி ஜே. செல்லம் இந்தக் கல்லூரியின் தொடக்கத்திலிருந்து முதல்வராக இருக்கிறார். இங்கு அவருக்கு உற்ற துணையாகக் கல்லூரியின் நிர்வாகங்களைக் கவனிப்பவரும் ஸ்ரீமதி சீதாலட்சுமி ராமஸ்வாமிதான்! ஆம்! ரயில்வே இலாகா உதவி மந்திரி சேலம் எஸ். வி. ராமஸ்வாமி அவர்களின் துணைவி ஸ்ரீமதி சீதாலட்சுமி அவர்களின் முழு முயற்சியால்தான் இந்தக் கல்லூரி தோன்றியிருக்கிறது. அவர்தான் இந்த கல்லூரியின் கரெஸ்பாண்டெண்ட்.

தற்சமயம் கல்லூரி வகுப்புகள் உயர்நிலைப் பள்ளிக்கூடத்தில் நடக்கின்றன. கல்லூரிக்கான பிரத்தியேகக் கட்டடத்துக்கு 1963ம் ஆண்டு ஜனவரி 6ம் தேதியன்று ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள் அஸ்திவாரக் கல் நாட்டியிருக்கிறார். இருபத்தி ஏழு ஏக்கரா நிலப் பரப்பில், ஹாஸ்டல், பேச்சு அரங்கம் முதலிய வசதிகளுடன் எழுந்து கொண்டிருக்கும் கல்லூரிக் கட்டடம் சீக்கிரமே பொலிவுடன் திகழவிருக்கிறது.

தர்ம சிந்தனையுடன் பல கொடை வள்ளல்கள் இந்தக் கல்லூரியை உருவாக்க நன்கொடைகளை வாரி வழங்கியிருக்கிறார்கள். சேலத்து பாங்கர் திரு ராமசந்த் பரஸ்ராமும், ஜி. டி. பிர்லாவும் தலா ஐம்பதினாயிரம் ரூபாய் கொடுத்திருக்கிறார்கள். டால்மியா மாக்னசைட் கார்ப்பொரேஷன் இருபத்தையாயிரம் அளித்திருக்கிறது. ஐயா

சேலம் அரசினர் கல்லூரித் தோற்றம் >

ஸ்ரீ சாரதா பெண்கள் கல்லூரிப் பிரின்ஸிபால் ஸ்ரீமதி செல்லம். V





யிரமும் பத்தாயிரமுமாகப் பல பேர்கள் அன்பளிப்புச் செய்திருக்கிறார்கள். கல்லூரிவகுப்புகளுக்கான அறைகள் நிர்மாணிப்பதற்காகவென்றே ஐம்பத்தி ஆறு நபர்கள் தலா இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய் கொடுத்திருக்கிறார்கள். ஸ்வாமி சித்பவானந்தா அவர்களைத் தலைவராகக் கொண்ட நிர்வாகக் குழு சேலம் நகரில் பெண்கள் உயர் கல்வித் துறைக்காக உற்சாகமாகப் பணியாற்றும்போது இக் கல்லூரியின் வளர்ச்சிக்குக் கேட்பானேன்?

ஆண்களின் கல்லூரிப் படிப்பைப் பொறுத்தவரை சேலத்திலுள்ள பெற்றோர்களுக்குக் கவலையில்லை என்றே சொல்லலாம்! அரசினர் நிர்வாகத்திலுள்ள கல்லூரி இங்கு பல வருடங்களாகவே இயங்கி வருகிறது. 1960ம் ஆண்டுவரை சேலம் முனிசிபல் கல்லூரியாக இருந்ததை அந்த ஆண்டில் அரசினர் நிர்வாகத்தில் சேர்த்துக் கொண்டார்கள். பல ஆண்டுகள் இங்கு ஆங்கிலப் பேராசிரியராகப் பணியாற்றிவரும் திரு வி. அச்சுதன் நாயர் கடந்த ஒன்பது வருட காலமாகக் கல்லூ.ரி முதல்வராகப் பணியாற்றி வருகிறார்.

1879ம் ஆண்டிலேயே உயர்நிலைப் பள்ளியிலிருந்து கல்லூரியின் அந்தஸ்தைப் பெற்ற இந்த நிறுவனத்துக்குச் சொந்தக் கட்டடம் 1932ம் ஆண்டிலேதான் உருவாயிற்று. காலம் சென்ற ஸ்ரீமதி ராதாபாய் சுப்பராயன் இந்தக் கட்டடத்தைத் திறந்து வைத்தாராம். 1944ம் ஆண்டில்தான் இந்தக் கல்லூரி இரண்டாம் கிரேடிலிருந்து முதல் கிரேடுக்கு உயர்த்தப்பட்டது. அது வரை அங்கு இண்டர்மீடியட் வகுப்புகள் மாத்திரம் தான் உண்டு. அப்போது கல்லூரியில் படித்த மாணவர்கள் சுமார் நானூறு பேர்கள்தான்.

இப்போது கல்லூரி மாணவர்கள் எண்ணிக்கை ஆயிரத்து முந்நூறைத் தாண்டி விட்டது. அவர்களில் அறுபது பேர் பெண்கள். சேலத்தில் பெண்களுக்கான கல்லூரி திறக்கப்பட்ட பிறகு, இங்கு பி. ஏ., பி. எஸ்ஸி. வகுப்புகளில் மாத்திரம் தாற்காலிகமாக மாணவிகளைச் சேர்த்துக் கொள்கிறார்கள். அறுபது ஆசிரியர்களும் ஐந்து ஆசிரியைகளும் இங்கு பணியாற்றுகிறார்கள்.

பொருளாதாரம், தமிழ் ஆகிய பாடங்கள் பி.ஏ.விலும் கணிதம், பௌதிகம், ரசாயனம், உயிரியல், பூமி சாஸ்திரம் ஆகிய பாடங்கள் பி. எஸ்ஸி.யிலும் அளிக்கப்படுகின்றன. ரசாயனப் பரிசோதனைசாலை பெரிய அளவில் விஸ்தரிக்கப்பட்டுக் கொண்டிருக்கிறது.

அறுநூற்று முப்பது மாணவர்கள் படிக்கும் புகுமுக வகுப்பு இந்தக் கல்லூரியின் விசேஷ அம்சம். இந்த அதிக எண்ணிக்கையுள்ள புகுமுக வகுப்பு வேறு எந்தக் கல்லூரியிலும் இருப்பதாகத் தெரியவில்லை.

வளர்ந்து வரும் மாணவர்களின் எண்ணிக்கைக்கு ஈடு கட்டப் புது கட்டடங்கள் எழுப்பும் திட்டம் சீக்கிரமே நிறைவேற்றப் படவிருக்கிறது. அப்போது பழைய கட்டட வகுப்பு அறைகளில் அதிகமாக உலாவும் எறும்புகளின் கடியிலிருந்து மாணவர்களுக்குப் பாதுகாப்பு கிடைக்கலாம். 'இப்போது படிக்க வரும் மாணவர்களின் உற்சாகத்தைக் குறைக்க வகுப்பு அறைகளுள் நுழைந்து கடிக்க வரும் எறும்புகள் ஜாஸ்தி' என்று ஒரு மாணவர் குறிப்பிட்டார்! அவர் ஓர் அநுபவஸ்தர் என்றுதான் தோன்றுகிறது.

சேலத்துடன் இணைந்து வாழ்ந்து அந்த நகரத்தின் பெருமையை உயர்த்திய ராஜாஜி. 'கிருஷ்ணைய செட்டி பரிசு' என்று ஆண்டு தோறும் 'நல்லநடத்தை உள்ள நபர்' என்று பெயரெடுக்கும் மாணவனுக்குப் பரிசு வழங்க ஏற்பாடு செய்திருக்கிறார். வளர்ந்து வரும் சேலம் அரசினர் கல்லூரிக்கு இன்னும் நிறைய வளர வாய்ப்பு இருக்கிறது.

அரசினர் கல்லூரி முதல்வர்
அச்சுதன் நாயர்



அரசினர் கல்லூரி சிறப்புக் கூட்டத்தில் மாணவ, மாணவிகள்



# நீரோட்டம்



## முதல் அத்தியாயம்

சுசிலா வாசலுக்கும் உள்ளுக்குமாகப் பத்துத் தடவை நடந்து விட்டாள். வெளியே சென்றிருந்த அவள் தந்தை ராஜு இன்னும் வீடு திரும்பவில்லை. தந்தை வரும் நேரம் வரை உள்ளே இருந்துகொண்டு ஏதேனும் ஒரு வேலையைச் செய்யவோ அல்லது ஒரு புத்தகத்தை வைத்துக் கொண்டு படிக்கவோ மனமில்லை. தந்தை கொண்டு வரப் போகும் செய்தியை ஓரளவு அவள் ஊகித்து வைத்திருந்தாள். வெற்றிக்கு வழிகாட்டியாக அவர் கொண்டு வரப்போகும் செய்தி இருக்கப் போவதில்லை. எல்லாவற்றையும் அறிந்துதான் அவள் தந்தையும் சென்றிருந்தார்.

சுசிலாவின் தாய் மீனாட்சி இறந்ததிலிருந்து இரண்டு மாதங்களாகவே இரவு பகல் பாராமல் ராஜுவும் இப்படிச் சுற்றிக் கொண்டுதான் இருக்கிறார். தந்தையின் நிலையில் சுசிலா பரிதாபம் கொண்டாள். மீனாட்சி இருந்தவரையும் ராஜு ஒரு சுகத்தையும் அனுபவிக்கவில்லை. ராஜு மட்டுமல்ல, சுசிலாவுக்கே மனத்தில் நிம்மதி இருந்திருக்கவில்லை.

அம்மாவின் போக்கே சுசிலாவுக்குச் சற்று வெறுப்பாகத்தான் இருந்தது. மகள் என்றும் பார்க்க மாட்டாள் அவள். ஏதேனும் ஒரு வேலையை ஏவிக் கொண்டேயிருப்பாள். படிப்பு இருந்த நாட்களிலும் தாயின் ஏவலுக்கு அவள் பணிந்துதான் ஆக வேண்டும். கல்லூரிபோகும் நேரம் வரை அம்மாவைத் திருப்தி செய்ய வீட்டுவேலைகளைச் செய்தாக வேண்டும். மாலை வந்ததும் தாயின் கட்டளைகள் காத்துநிற்கும். சுசிலா வீட்டில் இல்லாத நேரத்தில் மீனாட்சி கணவரிடமே தன் கட்டளைகளை ஒப்பி விடுவாள். அவளுக்கு எந்நேரமும் ஏதோ ஒரு நோயைக் கூறிக் கொண்டிருக்க வேண்டும்.

எஸ். ரங்கநாயகி

கணவர் மீது குற்றம் கூறிக் கொண்டிருக்க வேண்டும்.

மீனாட்சிக்கு என்றுமே மனத்தில் நிறைவு என்பது கிடையாது. அவளுடன் பிறந்தவர்களை விட அவள் நல்ல வாழ்க்கைதான் நடத்தினாள். ராஜு கை நிறையச் சம்பாதித்தார். அதிகப் பிக்குப் பிடுங்கல் இல்லாமல் சுசீலா ஒரே மகள்... இவ்வளவு இருந்தும், வீட்டில் கைகட்டிச் சேவகம் புரிய வேலைக்காரர்களுடன் சகல போகங்களையும் அனுபவிக்கும் இல்லமாக அமையவில்லை என்பது மீனாட்சியின் பெருங் குறை. மனைவியை உயர்ந்த நிலையில் வைக்காத கணவர், மனைவிக்காக வீட்டில் வேலை செய்ய வேண்டுமென்று வாதாடுவாள். மகளிடமும் பல வேலைகளை அவள் ஏவிவிடுவாள்.

தன்னையொத்த பெண்கள் தங்கள் தங்கள் இல்லத்தில் சுகமாக வாழும்போது தன் அம்மா மட்டும் தானும் வாழாமல், பிறரையும் வாழ விடாமல் செய்கிறாளே எனச் சுசீலா குறைப்படுவதுண்டு. தனக்குச் சீக்கிரத்தில் விவாகமாகி அந்த வீட்டிலிருந்து நகர்ந்து விட்டால் போதுமென்று கூட அவள் நினைத்த நாட்கள் உண்டு. அவள் விவாகத்தைப் பற்றி மீனாட்சியே என்றாவது கணவரிடம் கூறினாலும் ராஜு அதைக் காதில் போட்டுக் கொள்ளவே இல்லை. சுசீலா இல்லாமல் மீனாட்சியுடன் ஒண்டியாகச் சமாளிக்க முடியாது என்று நினைத்து விட்டாரோ!

வெறுப்பின் சின்னமாகவே அமைந்து வீட்டில் நிம்மதியைப் போக்கிய அதே மீனாட்சி, திடீரென்று அவர்கள் எதிர்பாராமல் ஒரு நாள் இவ்வுலகிலிருந்து விடைபெற்று விட்டாள். தாயென்றும் மனைவியென்றும் வீட்டில் வளைய வந்து கொண்டிருந்தவள் தன் இடத்தைச் சூன்யமாக்கி விட்டுச் சென்றுவிட்ட பின்புதான் தந்தையும் மகளும் உலகின் சூழ்நிலையில் ஒரு வீட்டுக்கு ஓர் எஜமானி எவ்வளவு அவசியம் என்பதைப் புரிந்து கொண்டனர்.

தாயார் இருந்தவரை அவளுக்கு அதிக மதிப்புக் கொடுக்காத சுசீலாவுக்கு இன்று அவளை நினைத்து ஏங்கும் நிலையில் கொண்டு வைத்து விட்டது உலகம். தாயின் மரண தினத்தை நினைத்தால் சுசீலாவுக்கு இப்போதும் தூக்கி வாரிப் போடுகிறது... சுசீலா ஏதோ படித்துக் கொண்டிருந்தாள். திடீரென்று ''சுசீலா மார்... வலி ...'' மீனாட்சியிடமிருந்து ஓலக் குரல் ஒன்று எழுந்தது.

சுசீலா திடுக்கிட்டு நோக்கினாள். மீனாட்சி கைகளால் மார்பைப் பிடித்தபடி கண்களை மூடித் திணறிக் கொண்டிருந்தாள். தாயின் அருகே ஓடினாள் சுசீலா. மகளின் மடியில் விழுந்து விட்டாள் தாயார்.

''ஐயோ அப்பா! சீக்கிரம் வாங்க.''

மகள் கூப்பாட்டைக் கேட்டு ராஜு மாடியிலிருந்து ஓடி வந்தார். மீனாட்சி சாகசம் செய்கிறாளோ என்று கூட ஒரு நிமிடம் தயங்கினார். அந்த ஒரு நிமிஷத்தில் மீனாட்சி கண்களைத் திறந்தாள். ''சு...சீலா...! உன்னையும் அப்பாவையும் விட்டுவிட்டு... போ...கி..'' வார்த்தைகள் முடியுமுன்பே அவள் போய் விட்டாள்.

ஒருவரும் எதிர்பார்க்காத முடிவு. சுசீலா கதறி யழுதாள்.

வீட்டில் வெறுப்புப் பொருளாகத்தான் இருந்தாள் மீனாட்சி. ஆனாலும் அவள் இறந்ததும் வீடே களை இழந்து காணப்பட்டது. கட்டளையிட்டு வேலை வாங்கிக் கூச்சல் போடுபவள் போய் விட்டாள். ஆனால் வீட்டில் நிலவிய அமைதியோ, தந்தை, மகள் இருவருக்குமே மனக் கிலேசத்தைக் கொடுத்தது. எல்லாவற்றுக்கும் மேலாக மகளைப் பற்றின பெருங் கவலை ராஜுவைச் சூழ்ந்தது.

எண்ணச் சுழலில் சிக்கியிருந்த சுசீலா தலை நிமிர்ந்து நோக்கினாள். வெளியே போயிருந்த ராஜு திரும்பி விட்டார். போய் வந்த அலுப்பில் சாய்வு நாற்காலியில் சாய்ந்து விட்டார். தந்தையின் முகத்தைப் பார்த்ததுமே அவர் போய் வந்த விவரத்தின் முடிவு சுசீலாவுக்குப் புரிந்து விட்டது. தந்தையிடம் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டிய அவசியமில்லை.

சுசீலா அடுப்பில் சூடாக வைத்திருந்த காப்பியை எடுத்து வந்தாள்.

ராஜு மகளை ஒரு முறை ஏறிட்டு நோக்கினார். பிறகு தலை குனிந்து விட்டார். சோர்ந்து கிடந்த முகமும் சோகம் படர்ந்த கண்களும் அவருடைய மனக் கிலேசத்தை நன்கு எடுத்துக் காட்டின.

''சுசீலா!'' குரலில் கனமே இல்லாமல் சத்தம் வந்தது.

''காப்பியைக் குடியுங்கள் அப்பா!'' சுசீலா அவர் கூற வந்ததைக் கேட்க விரும்பவில்லை.

ராஜு காப்பியை வாயில் ஊற்றிக் கொள்ளவில்லை. கைப்பிடியில் வைத்தார். பெருமூச்சு ஒன்று வெளிப்பட்டது.

''சுசீலா எனக்குத் தெரியாதா உன் மௌனத்தின் பொருள்? நான் என்னம்மா செய்யட்டும்?''

உங்கள்
அலுவல்களை
அஜீரணம்
பாதிக்கிறதா?

# ஹ்யூலெட்ஸ் மிக்சர்

## *அஜீரணத்தை விரைவில் அகற்றுகிறது*

கட்டிப்போட்டாற்போல், ஒரே இடத்தில் அமர்ந்த வாறே உங்கள் அலுவல்களைக் கவனிக்க வேண்டி யிருக்கிறது. ஏனெனில் உங்கள் வேலை அப்படி யானது. இக்காரணத்தினால் உங்களைப் போன்ற வர்கள் அடிக்கடி அஜீரணத்தினால் அவஸ்தைப்பட நேரிடுகிறது. ஆனால் நீங்கள் அவ்வாறு கஷ்டப்படத் தேவையில்லை. ஹ்யூலெட்ஸ் மிக்சர் வயிற்று உபா தையை விரைவில் போக்கி, நிரந்தரமாக குணமளிக் கிறது; வலியுண்டாக்கும் அமிலங்களை அகற்றி, ஜீரண கோசத்திற்கு அதன் வேலையை சரிவர செய்வதற் கேற்ப பாதுகாப்பளிக்கிறது.

ஹ்யூலெட்ஸ் மிக்சர் குழந்தைகளின் வயிற்றுக் கோளாறுகளுக்கும் கூட உத்தமமானது. வயிற்றுப் போக்குக்கு அபினி சேர்த்த ஹ்யூலெட்ஸ் மிக்சர் குணமளிக்கும்.




***ஹ்யூலெட்ஸ் மிக்சர் ஜீரணத்திற்கு சிறந்தது***

C. J. ஹ்யூலெட் & ஸன் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
86/A, கனியப்ப நாயக் தெரு, மதராஸ்-3

JWT/CJH/1929

''அப்பா! இப்பொழுது ஒன்றுமே பேச வேண்டாம். நீங்கள் காப்பியைக் குடியுங்கள். பிறகு பேசிக் கொள்ளலாம். போய் வந்த அலுப்புத் தீரச் சற்று இளைப்பாறுங்கள்.''

''சுசிலா...!''

''அப்பா! காப்பியைக் குடியுங்கள்.''

உணர்ச்சியற்ற கை வாயில் காப்பியை ஊற்றியது. காப்பி தானாகத் தொண்டைக்குள் இறங்கியது.

''சுசிலா! உலகத்தில் தாயற்ற குழந்தைகளின் நிலை எனக்கு இப்போது தான் புரிகிறது. உன் அம்மா இருந்த வரை நான் சுகமாக இருந்தேன் என்றும் கூற முடியாது. ஆனால்...''



''அப்பா! அம்மா போய்விட்டாள். இனி அதைப் பற்றிப் பேசி என்ன பலன்? அவள் இருந்தவரை அவளைக் குறை கூறினோம். அவள் நல்ல குணம் அடைவாள் என்று எதிர்பார்த்தோம். நாம் ஏமாற்றம் கண்டு விட்டோம். அவள் போய் விட்டாள் மஞ்சள் குங்குமத்துடன். நாமோ அவளை நினைத்து உட்கார்ந்து கிடக்கிறோம்...''

சுசிலா கூறிக்கொண்டே போனாள். ராஜு பதிலே கூறவில்லை. பதில் கூறவே சக்தி யில்லாதவர் போல் அவர் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கிடந்தார்.

சற்று மௌனமாக இருந்துவிட்டுச் சுசிலா மீண்டும் கூறினாள்:

''அப்பா போனது போகட்டும். நான் சொல்வதைச் செவி சாய்த்துக் கேளுங்கள். என் விவாகத்துக்காக நீங்கள் ஏன் இப்படி அலைகிறீர்கள்? விவாகப் பேச்சை எடுப்பதால்தானே அடுத்துச் செய்ய அம்மா இருக்கிறாளா என்ற கேள்வி பிறக்கிறது? பிள்ளையைப் பெற்றவர்களுக்கும் கல்யாணப் பிள்ளைகளுக்கும் நாம் ஒரு சவால் விடுவோம். எனக்கு விவாகமே வேண்டாம். நான் விவாகமாகிப் போய்விட்டால் உங்களைக் கவனிக்கவும்தான் யார் இருக்கப் போகிறார்கள்?''

சுசிலா நிச்சயித்து விட்டாள். தந்தை இதுபோல் ஒவ்வொரு வீடாக ஏறி ஏறி இறங்குவது அவளுக்குப் பரிதாபத்துக்குரியதாக இருந்தது. எந்த வீட்டு வாசற்படி ஏறினாலும், ''நானைக்கே பெண்ணுக்குப் பிரசவம், பேறுகாலம் என்றால் இழுத்துப் போட்டுச் செய்ய வீட்டில் ஒரு தாயோ வேறு பெண் பிள்ளையோ இல்லையே! அநாதையாக இங்கு வந்துவிட்டால் முழுப் பொறுப்

ம் ஏற்றுச் செய்ய இங்கு யாரால் முடி
ம்?'' என்ற கேள்விதான் ஒலித்தது.
அநாதையாம் அவள். அம்மா
ருந்தபோதும் அவள் மனம் துன்
ற்றுத்தான் இருந்தது. அம்மாவிடம்
டும் பாட்டை நினைத்தால் சீக்கிரம்
வாகமாகி வெளியே போய்விட
ாட்டோமா எனத் தவித்ததையும்
வள் மறக்கவில்லை. அம்மாவின்மீது
ன்பே இல்லை என்றும் சொல்லிவிட
டியாது. தான் விரும்பிய அதி
ாரத்தை அனைவர் மீதும் செலுத்த
ற்பட்ட அவளுடைய பேராசைதான்
ீலாவின் இந்த எண்ணத்துக்குக்
ாரணமாக இருந்தது. இப்போதோ...?





"நீங்க நான்கு மாதங்களுக்கு முன்னல் என்னிடம் விற்ற கடிகாரம் ஒரு சமயம் வேகமாகப் போகிறது. ஒரு சமயம் மெதுவாகப் போகிறது!"

"ஆ! என்ன ஆச்சர்யம்! இன்னமுமா அந்தக் கடிகாரம் ஓடிண்டிருக்கு!"

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

மகளின் விவாகத்துக்கு மனைவி தூண்டியபோதெல்லாம் ராஜு மௌனமாக இருந்து விட்டார். திடீரென ஒரு நாள் அவள் இறந்ததும்தான் தன் தலையில் ஏதோ பெரிய பாரம் விழுந்துவிட்டது போன்ற உணர்ச்சி அவருக்கு ஏற்பட்டது. மீனுட்சியின் கரும காரியங்கள் முடிந்து, முதல் நாள் அவர் ஆபீசுக்குச் சென்றபோது அவரால் அங்கு நிம்மதியாக வேலை செய்ய முடியவில்லை. அருமை மகள் தனித்து விட்டில் என்ன செய்கிருளோ, தனிமை என்னும் பூதம் அவளை எப்படியெல்லாம் வாட்டுகிறதோ, அன்னியன் எவனுவது உள்ளே புகுந்து விட்டால்..." அதற்கு மேல் அவரால் நினைக்க முடியவில்லை. பிற்பகல் லீவு போட்டு விட்டு வந்து விட்டார். அன்றைய தினமே சுசீலாவை ஒருவனிடம் பாதுகாப்பாக ஒப்படைத்து விட்டு அவளைப் பற்றின கவலையிலிருந்து விலக நிச்சயித்தார்.

அன்னை என்பதற்கு வெளி உலகில் எவ்வளவு பொருள், மதிப்பு, பெருமை உண்டு என்பதைச் சென்றவிடமெல்லாம் அவரை உணரும்படி செய்துவிட்டனர் பிள்ளையைப் பெற்றவர்கள். நோய், நொடி என்றல், தாய்தான் கவனித்துக் கொள்ளக்கூடிய அன்புள்ளம் பெற்றவள் என்பதை எடுத்துக் காட்டினர். போகட்டும், ஒரு தாய் இல்லாவிடினும் அரவணைப்புக் காட்டும் பெண் மக்கள் எவரேனும் உண்டா என்பதற்கு அவர் கையை விரித்துவிட்டு வரத்தான் முடிந்தது. இனி எந்தப் பெண்ணை உறவு என்ற முறையில் வீட்டில் கொண்டு வந்து அவர் வைத்துக் கொள்ள முடியும்?

அவர் மனம் வெந்து தவித்தது. காலையிலிருந்து மாலை வரை அவர் ஏறி இறங்காத இடமில்லை. கண்டவர் கேட்டவரிடம் சுசீலாவுக்காக ஒரு வரன் கேட்கத் தவறவில்லை. எந்த முயற்சியிலும் வெற்றி கிட்டாதபோது அவர் மனம் சோர்வடைந்தது.

தந்தையின் நிலை கண்டு சுசீலா தவி தவித்தாள். தாய் இருந்தபோதே, தந்தையின் நிலைக்கு அவள் பரிதாபம் கொண்டவள். அம்மா கண்களை மூடிய போது கடைசிக் காலத்தை நினைத்து அவள் வீறிட்டு அழுதது உண்மைதான். இப்பொழுதும் அந்தப் பேச்சைக் கேட்கும்பொழுது அவளுக்கு நெஞ்சே வெடித்துவிடும்போல் இருந்தது.

இந்த விவாகக் கஷ்டமே வேண்டாம். பெண்ணுகப் பிறந்து விட்டால் கல்யாணம் செய்துகொண்டு ஓட வேண்டியது அவசியந்தானு? பாவம், அப்பா, அம்மா இருக்கும்போதே ஒரு சுகத்தையும் கண்டிருக்கவில்லை. இப்பொழுதும் மகள் விவாகமாகிப் போய் விட்டால் தனியாகத் திண்டாடப்போகிருர். தாயற்ற அநாதையென்று ஒவ்வொருவரிடமும் ஏச்சுப் பேச்சுக் கேட்டு, வரனைத் தேடி அலைவதைக் காட்டிலும் அப்பாவுடன் இருந்து கொண்டே வாழ்நாட்களைக் கழித்து விடலாம். அவள் இப்படித் தான் நிச்சயித்திருந்தாள்.

"ராஜு! ராஜு!"

**வா**சலில் குரல் கேட்டது. சுசீலா எழுந்து சென்று கதவைத் திறந்தாள்.

"அப்பா இருக்கிருரா?"

"இருக்கார் மாமா. நீங்க உள்ளே வாங்க." சுசீலா முன்னே சென்றுள். பின்னே ராஜுவின் நண்பர் உமாபதி சென்ருர்.

"ராஜு!"

"வாப்பா உமாபதி!..." தலையை நிமிர்த்தி ஒரே ஒரு வார்த்தை கூறினர்.

"ராஜு, போன காரியம் என்ன ஆயிற்று? காயா, பழமா?"

"மாமா! அப்பாவோட முகத்தைப் பார்த்தாலே நீங்க தெரிஞ்சுக்கலாமே! சூதாட்டக் காய்களைப் போல் நான் நடுவிலே கிடந்து உருளுவது உங்களுக்குப் பிடிக்கிறதா மாமா? நீங்களே மனம் வெச்சுப் பேசுங்க..."



# மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர் கொடுத்து



மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர் அஜீரணத்தைத் தடுக்கிறது. அதிலும் குறிப்பாக குழந்தைகளுக்குப் பற்கள் தோன்றும்போது பெருமளவில் உதவுகிறது.

குடலில் ஏற்படும் திருகுவலி போன்ற வயிற்று வலி சம்பந்தமான தொல்லைகளைப் போக்கி, சுகமான நிலையை உண்டாக்குகிறது.

வயிற்று வீக்கங்களை- உப்புசங்களைப் போக்கி, [illegible] உதவுகிறது.

உடல் நலத்தைப் பாதுகாத்து, குழந்தை அமைதியுடன் உறங்கவும் உறுதுணைபுரிகிறது.

# மீண்டும் புன்னகை தோன்றக் காணுங்கள்





ஒரு நாளைக்கு இருமுறை வீதம் ஒவ்வொரு நாளும் மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர் கொடுத்து வந்தால், உங்கள் குழந்தை உற்சாகத்துடனும், உடல் நலத்துடனும் காணப்படும்



**GEOFFREY MANNERS & COMPANY LIMITED**

ASP/GM-18 TM.

சுசிலா சற்றுக் கோபக் கலப்புடன் தான் பேசினாள்.

''சுசிலா, ஆத்திரப்படாதே. கல்யாணம் என்றால் நாலும்தான் இருக்கும்..''.

''இந்த நாலும் இருக்கிற கல்யாணம் எனக்கு வேண்டாமென்கிறேனே. ஏன் மாமா, நான் அப்பாவின் வீட்டோடு இருந்தால் அப்பாவுக்குப் பாரமாக இருக்குமா? வெளியே விரட்ட ஏதுக்கு ஏச்சுப் பேச்சுக் கேட்கணும்?''

''மரத்துக்குக் காய் பாரமாகுமா, அம்மா? ஆனால் கனி பழுத்து முற்றி விட்டால் மரமே அதை உதிர்த்துவிடுவதை நீ கண்டதில்லையா? ஒவ்வொரு பொருளும் அதற்குரிய இடத்தில் இருந்தால்தானே நன்றாக இருக்கிறது? வீட்டில் ஒரு துணையில்லாமல் நீ தனியாக இருக்க முடியாதேம்மா? அப்பா ஆபீசுக்குப் போய்விட்டால் கதவை மூடிக்கொண்டு எவ்வளவு நேரம்தான் தனிச்சு உட்கார்ந்து கிடப்பாய்?''

''தனிச்சு இருப்பானேன்? இப்பத்தான் பெண்களும் வேலைக்குப் போகிறார்களே? அது போல் நானும் ஒரு வேலை தேடிக் கொள்ளுகிறேன்.''

''சுசிலா! வேலைக்குப் போவது பெருமை என்று நினைத்துக் கொள்ளாதே. காரண காரியங்களின்றி உலகில் இயற்கையின் நியதி எதுவுமே ஏற்படுவதில்லை. சில நாட்கள் வேலைக்குப் போய் வந்தால் பிறகு உனக்கே அலுத்துவிடும். நம்மை அறியாமல் நாம் உலகில் பலரை நிந்திக்கிறோம். நம்மைப் பற்றி யாராவது குறை கூறும்போது மட்டும் நாம் சகிப்பதில்லை....''

சுசிலாவுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. இவர் ஏதோ தெரிந்தவர் போல் பெரிதாகச் சொற்பொழிவாற்ற வந்து விடுகிறாரே! என் நிலையில் இவர் இருந்தால் என்மனம் இவருக்குப் புரியும். இயற்கையாம், நியதியாம். யாருக்கு வேண்டும் இதெல்லாம்.?

அவள் வாயைத் திறந்தாள். ராஜு அவளை அடக்கி விட்டார்.

''சுசிலா, நீ கதவைத் தாளிட்டுக் கொள். நான் உமாபதியோடு வெளியே போய்விட்டு வரேன்'' என்று கூறி எழுந்து விட்டார் ராஜு. அவருக்குத் தெரியும், மேலும் அங்கிருந்தால் சுசிலா மன உளைச்சல் காரணமாகப் படபடவென்று கொட்டிவிடுவாள் என்று.

சுசிலா கதவைத் தாளிட்டுக்கொண்டாள். தாய் படுத்து உறங்கி வந்த கட்டிலில் குப்புறப் படுத்து அழுதாள்.

''ராஜு, போன இடத்திலே ஒன்னும் சுகப்படலையா?'' உமாபதி மெதுவாகக் கேட்டார்.

''சுசிலாவேதான் சொல்லி விளக்கி விட்டாளே. நல்ல இடம்தான். பிள்ளையும் நல்லாத்தான் இருந்தான். ஆனால் எல்லாத்துக்குமே தலையாட்டிக்கிட்டு வந்தவங்க பெண்ணுக்கு அம்மா இல்லைன்னு கேட்டதுமே தலையாட்டலை நிறுத்திவிட்டார்கள். வீட்டிலே மேலும் ஒரு பெண்ணும் இல்லை என்றதுமே 'அப்படின்னா நாளைக்கே ஒரு நோவு நொடி என்றால் அழைச்சுச் செய்ய ஒருத்தருமே இல்லையே'ன்னு கோடி காட்டிவிட்டார்கள். நானும் எழுந்து வந்து விட்டேன்.''

உமாபதி சற்றுத் தூரம் மௌனமாக நடந்து வந்தார்.

''உமாபதி! சுசிலாவின் அம்மா இருந்தால்கூட அவளால் சுசிலாவுக்கு ஒரு உதவியும் கிடைத்திருக்காது. அம்மா என்று ஒரு பொம்மையை வீட்டில் வைத்திருந்தாலாவது மற்றவர்கள் சம்மதம் தருவார்கள் போலிருக்கிறது. நான் இந்தக் கஷ்டத்துக்கு என்ன செய்வேன்?'' என்று கண் கலங்கினார் ராஜு.

(தொடரும்)










1: இந்திய உதவி ஜனாதிபதி ஜாஹிர் ஹுசைன் ராஜாஜியை அவரது இல்லத்தில் சந்தித்து அளவளாவினார். 2. கேரள சமாஜத்தின் ஆதரவில் கம்ப ராமாயணத்தை மலையாளத்தில் மொழிபெயர்த்த டாக்டர் எஸ். கே. நாயர் அவர்களுக்கு முதன் மந்திரி குத்துவிளக்குப் பரிசளிக்கிறார். 3. பம்பாயில் 'சபர்பன் பைன் ஆர்ட்ஸ் சங்கீத சபா'வை மகாராஷ்டிர உதவி மந்திரி கைலாஸ் தொடங்கி வைத்தார். செம்மங்குடி அவர்களது இசை விருந்து நடந்தது. 4. மயிலை சிவமுத்து அவர்களுடைய தொண்டினைப் பாராட்டித் திரு சோமு அவர்களின் தலைமையில் ஒரு விழா நடந்தது. 5. உடல்நிலை தேறிய பிரதமர் நேருஜி தம் இல்லத்தில் ஓய்வெடுத்துக்கொள்ளும் காட்சி. 6. பம்பாய் ஷண்முகானந்த சபையினர் புரந்தர தாஸர் நினைவு நாளை ஸ்ரீ ஸ்ரீபிரகாசா தலைமையில் விமரிசையாகக் கொண்டாடினர்.








# மந்திரிக்கேற்ற வேலை

நாடோடி



தம்மை வேலை கேட்ட ஆசாமியைப் பார்த்து, 'டாம் டூம்' கம்பெனியின் முதலாளி சிரித்தார்.

''என்ன, விளையாடுகிறீர்களா? நீங்களாவது வேலை வேண்டும் என்று விரும்புவதாவது! நம்ப முடியாத காரியமாக இருக்கிறதே!'' என்றார்.

''நானும் அப்படித்தான் ஒரு காலத்தில் நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் இப்பொழுது நிலைமை மாறி விட்டது. நான் வேலை தேட வேண்டிய நிலைமை ஏற்பட்டு விட்டது'' என்றார் முதலாளியின் எதிரே உட்கார்ந்திருந்த மாஜி மந்திரி.

ஆம், இவர் ஒரு மாஜி மந்திரிதான். பத்து வருட காலமாக மந்திரி வேலை பார்த்துவிட்டு இப்பொழுது சென்ற ஐந்து வருடங்களாக வேலை இல்லாமல் தவிப்பவர். எதிர்க் கட்சியினர் சர்க்காரைக் கைப்பற்றிக்கொண்டு விட்டபடியால் அவருக்கு இந்தக் கதி நேர்ந்து விட்டது!

சென்ற ஐந்து வருடங்களாக, மீண்டும் தம் கட்சி அரசாங்கத்தைக் கைப்பற்றும், தாம் பழையபடி மந்திரி வேலைக்கு வரலாம் என்று காத்துக் கொண்டிருந்தவரின் மனக் கோட்டை இப்பொழுது இடிந்து குலைந்து விட்டது. எதிர்க் கட்சியே மீண்டும் பதவிக்கு வந்து விட்டது.

''நான் கேட்கிறேனே என்று கோபித்துக் கொள்ளக் கூடாது. உங்களுக்கு என்ன வேலை தெரியும்?'' என்று கேட்டார் முதலாளி.

''நான் எதற்காகக் கோபித்துக்கொள்கிறேன்?'' என்று சிரித்துக்கொண்டே பதில் சொல்ல ஆரம்பித்தார் மாஜி மந்திரி.

''நான் மந்திரியாக இருந்த காலத்தில் ஒன்றுக்கு ஒன்று சம்பந்தமில்லாத எத்தனையோ இலாக்காக்கள் என் கீழ் இருந்தன. ஆனால் உண்மையைச் சொல்ல வேண்டுமானால், என் காரியதரிசி காண்பித்த இடத்தில் நான் கையெழுத்துப் போட்டுக்கொண்டிருந்தேனே தவிர அவற்றைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. இப்பொழுது நினைத்துப் பார்க்கும்போது, காரியாலயத்தில் நான் செய்த ஒரே வேலை காரியதரிசி காண்பித்த இடத்தில் கையெழுத்துப் போடுவது ஒன்றுதான் என்று நினைக்கிறேன்'' என்று சொல்லிவிட்டு, வாய் விட்டுச் சிரித்தார் மாஜி மந்திரி.

முதலாளி முகத்தைச் சுளுக்கினார். ''அப்படிப் பட்ட வேலை ஒன்றும் எங்கள் காரியாலயத்தில் இடையாதே! காண்பித்த இடத்தில் கையெழுத்துப் போடுவது சர்க்கார் சம்பந்தப்பட்ட மட்டில் சரியாக இருக்கலாம். ஆனால் எங்கள் காரியாலயத்தில் அப்படிச் செய்தால் நாங்கள் காரியாலயத்தை மூடிக்கொண்டு, தலையில் முக்காடு போட்டுக்கொண்டு போக வேண்டியதுதான்'' என்றார்.

இதைக் கேட்டதும் மாஜி மந்திரியின் முகத்தில் சற்று வாட்டம் காணப்பட்டது. இதைக் கவனித்த முதலாளி ''அதற்காகக் கவலைப்படாதீர்கள். காரியாலயத்தை விட்டு வெளியே சென்றபோதெல்லாம் எத்தனையோ வேலைகள் செய்திருப்பீர்களே?'' என்றார்.

''ஆம். நிறையக் கொடிகளை ஏற்றி வைத்திருக்கிறேன். தலைவர்களின் படங்களைத் திறந்து வைத்திருக்கிறேன்.''

''அதாவது ஏதாவது கயிறு தொங்கிக் கொண்டிருந்தால் அதை இழுக்கத் தெரியும் என்று சொல்லுங்கள்.''

''அப்படித்தான் வைத்துக் கொள்ளுங்களேன்!'' என்றார் மாஜி மந்திரி சிரித்துக் கொண்டே.

''அப்படியானால் கவலைப்படாதீர்கள். மேலே கூரைக்குப் பக்கத்தில் அமைக்கப்பட்டுள்ள ஜன்னல்கள் கிட்டத்தட்ட நூறு என் காரியாலயத்தில் உள்ளன. அவற்றுக்குக் கட்டப்பட்டுள்ள கயிறுகளைத் தினம் காலையில் இழுத்துக் கதவுகளைத் திறக்க வேண்டும். ஆனால் இது தங்களுக்கு மிகவும் சின்ன வேலையாயிற்றே என்றுதான் பார்க்கிறேன்.''

''பரவாயில்லை. என் பொக்கிஷ நிலைமை இப்பொழுது உள்ள நிலையில் எந்த வேலையாக இருந்தாலும் பரவாயில்லை. நான் செய்யத் தயாராயிருக்கிறேன்'' என்றார் மாஜி மந்திரி.

''ஆமாம், இதைத் தவிர இன்னும் எத்தனையோ காரியங்கள் செய்திருப்பீர்களே!'' என்று கேட்டார் முதலாளி.

''சர்க்கார் கொள்கைகளை விளக்கி மக்கள் முன் என்னால் பேச முடியும்.''



''பரவாயில்லை. எங்கள் தொழிலாளிகளுக்கு முதலாளியின் நோக்கங்களை எடுத்துச் சொல்லத் தங்களைப் பயன்படுத்திக் கொள்ள முடியும். இன்னும் என்ன தெரியும்?''

''கட்டடங்களுக்கு முன்னால் ஏதாவது ரிப்பன் கட்டப்பட்டிருந்தால் அதைக் கத்திரிக்கோல் கொண்டு கத்திரிக்கத் தெரியும்.''

''பரவாயில்லை. அந்த வேலையும் எங்கள் காரியாலயத்தில் இருக்கிறது. நீள நாடாவை ஒரே அளவுள்ள சிறு நாடாக்களாகக் கத்திரிக்க வேண்டியிருக்கிறது. இன்னும் வேறு என்ன தெரியும்?''

''அஸ்திவாரக் கற்கள் நாட்டத் தெரியும். அதாவது கற்களைக் காரை வைத்துப் பூசத் தெரியும் என்று வைத்துக் கொள்ளுங்களேன்...!''

''பரவாயில்லை. அத்தகைய வேலையும் எனக்குத் தேவைப்படுகிறது. இன்னும் என்ன தெரியும்?''

''யாராவது முன்கூட்டியே குழி தோண்டி வைத்திருந்தால் அதில் செடிகளை நட்டுத் தண்ணீர் ஊற்றத் தெரியும்.''

''பேஷ்! இந்த வேலையும் எங்களுக்குத் தேவைதான். இன்னும்?''

''மேஜையில் நிறையப் பரிசுகள் வைத்திருந்தால் அவற்றை வழங்கத் தெரியும். ஆனால் இந்த வேலையை மற்ற வேலைகளைப் போல் அத்தனை நன்ருகச் செய்வேன் என்று சொல்ல முடியாது. ஏனெனில் முக்கால் வாசிப் பரிசு விழாக்களில் பரிசு வழங்கும் வேலையை என் மனைவிக்குக் கொடுத்து விடுவார்கள். அதனால் மற்ற வேலைகளில் உள்ள பயிற்சி இதில் எனக்குக் கிடையாது'' என்ருர் மாஜி மந்திரி.

''பரவாயில்லை. இரண்டு நாட்கள் செய்து பார்த்தால் தன்னைப் போல் வந்துவிடுகிறது. ஆனால் இங்கு பரிசு வழங்கும் வேலை இல்லை. மத்தியான வேளைகளில் சாப்பாட்டு சமயத்தில் அந்தந்தத் தொழிலாளியின் டிபன்பாக்ஸை எடுத்து அந்தந்தத் தொழிலாளியிடம் கொடுக்க வேண்டும். இன்னும்?''

''அவ்வளவுதான் என்று நினைக்கிறேன்.''

''பரவாயில்லை. ஏதோ சில வேலைகள் கற்று வைத்திருக்கிறீர்கள். ஆனால் எல்லாம் சின்ன வேலைகளாக இருக்கின்றனவே என்றுதான் பார்க்கிறேன்.''

''நான்தான் சொன்னேனே! என்ன சின்ன வேலையாக இருந்தாலும் இப்பொழுதுள்ள சூழ்நிலையில் எனக்குத் தேவையாகத்தான் இருக்கிறது.''

''சரி. நான் ஒன்று சொல்லுகிறேன், கேளுங்கள். உங்களுக்குத் தெரிந்த வேலைகளைத் தினம் ஒவ்வொன்ருகச் செய்து



பாருங்கள். கடைசியில் எந்த வேலையை மிகத் திறமையாகச் செய்கிறீர்களோ அதை ஏற்றுக் கொள்ளுங்கள். என்ன நான் சொல்லுகிறது?'' என்று சொல்லி முடித்தார் முதலாளி. 'சரி' என்று ஒப்புக் கொண்டார் மாஜி மந்திரி.

அடுத்த நாளே காரியாலயத்தின் கூரைப் பக்கத்திலுள்ள கதவுகளை யெல்லாம் கயிறு கொண்டு இழுத்துத் திறக்கும் வேலை மாஜி மந்திரிக்குக் கொடுக்கப்பட்டது. ஆனால் முதலாளி மாலையில் போய்ப் பார்த்தபோது ஒரு கதவையாவது மந்திரி கயிறு கொண்டு இழுத்துத் திறந்து வைக்கவில்லை. எல்லாக் கதவுகளும் மூடியபடியே கிடந்தன.

''சரி. இந்த வேலைக்கு இவர் லாயக் கில்லைபோலிருக்கிறது'' என்று நினைத்த முதலாளி இவருக்கு அடுத்த நாளே தொழிலாளிகளுக்கு முதலாளியின் நோக்கத்தை எடுத்துச் சொல்லும் வேலையைக் கொடுத்தார்.

இவர் பிரசங்கத்தைக் கேட்க எல்லாத் தொழிலாளிகளும் கூட்டமாகக் கூடினுர்கள். இவரும் பேசுவதற்காக மேடை மீது ஏறினுர். முன்னும் சென்று, மைக்கை இடது கையினுல் பிடித்துக் கொள்ளவும் செய்தார். ஆனால் அவர் வாயிலிருந்து ஒரு வார்த்தை வர வேண்டுமே! ஒன்றும் வரவில்லை.

''சரி, இந்த வேலைக்கும் இவர் லாயக் கில்லை'' என்று முதலாளி தீர்மானித்து அடுத்த நாள் ஒரு கத்தை நாடாக்களை அவரிடம் கொடுத்து, ஒரு குறிப்பிட்ட அளவுக்கு அவற்றைக் கத்திரிக்கும்படி சொன்னுர். ஆனால் மாலையில் பார்த்தால் அந்த வேலையையும் செய்யாமல் மாஜி மந்திரி பேசாமல் உட்கார்ந்திருந்தார். நாடாக் கத்தை அவர் முன் அப்படியே கிடந்தது.

முதலாளிக்கு ஒன்றும் புரியவில்லை. இந்த வேலை தெரியும் என்று சொன்னவர் ஒரு வேலையையும் செய்யாமல் பேசாமல் இருக்



கிறாரே என்று ஆச்சரியப்பட்டார். சரி, வேறு வேலைதான் கொடுத்துப் பார்ப்போம் என்று காரியாலயத்தில் சில பகுதிகளில் கற்களைக் காரை வைத்துப் பூசும்படி சொன்னார். இந்த வேலையையும் மாஜி மந்திரி செய்யாமல் உட்கார்ந்திருந்தார்.

"சரி, தோட்டக்காரன் தோண்டி வைத்த குழிகளில் செடிகளை வைத்துத் தண்ணீர் விடுங்கள்" என்று முதலாளி சொன்னார். ஆனால் மாலையில் போய்ப் பார்த்தால் அந்த வேலையையும் மாஜி மந்திரி செய்து முடிக்கவில்லை.

அடுத்த நாள் முதலாளி மாஜி மந்திரியைக் கூப்பிட்டு அனுப்பினார். "நீங்கள் தெரியும் என்று சொன்ன கிட்டத்தட்ட எல்லா வேலைகளையும் உங்களுக்குக் கொடுத்துப் பார்த்துவிட்டேன். ஆனால் ஒரு வேலையையும் நீங்கள் சரியாகச் செய்யவில்லை. கடைசியாக ஒரு வேலைதான் பாக்கியிருக்கிறது. அதையாவது எப்படிச் செய்கிறீர்கள் என்று பார்க்கிறேன். டிபன் நேரம் வந்ததும் எல்லாத் தொழிலாளர்களும் வருவார்கள். ஒவ்வொருவராகப் பெயரைச் சொல்லுவார். நீங்கள் அவரவர்களுக்கு அவரவர் டிபன் பாக்ஸை எடுத்துக் கொடுக்க வேண்டும். பரிசு வழங்குவது போன்றதுதான் இது" என்று சொன்னார். 'சரி' என்று மாஜி மந்திரி தலையை ஆட்டினார்.

ஆனால் இந்த வேலையையும் மாஜி மந்திரியால் சரியாகச் செய்ய முடியவில்லை.

அடுத்த நாளே முதலாளி மாஜி மந்திரியைக் கூப்பிட்டு அனுப்பினார். "நான் சொல்கிறேனே என்று நீங்கள் கோபித்துக்கொள்ளக் கூடாது. உங்களுக்குத் தெரியும் என்று நீங்களே ஒப்புக்கொண்ட ஒரு வேலையைக் கூட உங்களால் செய்ய முடியவில்லை! ஏன்?" என்று கேட்டார்.

அதற்கு மாஜி மந்திரி, "நானும் முயன்று தான் பார்த்தேன். என்னால் முடியவில்லை. ஆனால் இதற்குக் காரணம் இல்லாமல் இல்லை. பக்கத்தில் ஒரு போட்டோகிராபர் நின்று படம் பிடித்துக் கொண்டே இருக்கையில் இக் காரியங்களைச் செய்து பழக்கப் பட்டுப் போய்விட்டதால், போட்டோகிராபர் இல்லாமல் என்னால் ஒன்றும் செய்ய முடியவில்லை" என்றார்!

## கவிக் குயிலுக்குக் கரம் குவிப்போம்!

திறமான புலமையெனில் பிற நாட்டார் அதை வணக்கம் செய்தல் வேண்டும் என்றார் அமரகவி பாரதி! கவிஞன் வாக்கு பொய்க்காது என்பார்கள்; பாரதி வாக்கு அவர் காலத்திலேயே உண்மையாகியது: சரோஜினி நாயுடுவின் வாழ்க்கையில்!

1879ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 13-ம் தேதி ஐதராபாத்திலே அகோரநாத் சட்டோபாத்யாவுக்கு முதல் குழந்தையாகப் பிறந்தவர் சரோஜினி. ஒன்பதே வயது நிறைந்த சரோஜினி ஆங்கிலம் பேச மறுத்ததால் ஒரு நாள் முழுதும் அறையில் தனியாக அடைத்து வைக்கப்பட்டார். அந்தத் தண்டனைதான் தகப்பனாரிடம் சரோஜினி பெற்ற ஒரே தண்டனை!



ஒரு நாள் பதினொரு வயதுச் சிறுமி சரோஜினி, அல்ஜீப்ராக் கணக்கு ஒன்றை வைத்துக் கொண்டு திகைத்திருந்தார். கணக்குப் போட்டு முடியவில்லை. ஆனால் சரோஜினியின் உள்ளத்தில் கவிதை பிறந்து விட்டது.

அன்றிலிருந்து சரோஜினியின் கவிதை வாழ்வு ஆரம்பமாகியது. பன்னிரண்டே வயதில், சென்னை பல்கலைக் கழகத்தின் மெட்ரிகுலேஷன் தேர்வில் வெற்றி பெற்றார் சரோஜினி. பதின்மூன்றும் வயதிலேயே 1300 வரிகளில் நீண்ட கவிதை ஒன்றை ஆறே நாட்களில் எழுதி முடித்தார். அதே ஆண்டில் திடீரென்று சரோஜினி நோய்வாய்ப்பட்டாள். புத்தகத்தையே தொடக் கூடாது என்று டாக்டர் கட்டளையிட்டார். அந்தக் கட்டளையையும் மீறி, சரோஜினி 2000 வரிகளுக்கு மேற்பட்ட நாடகம் ஒன்றை எழுதினார்.

1898-ம் வருடம் சரோஜினி, டாக்டர் கோவிந்தராஜுலு நாயுடுவை மணந்தார்.

1915ல் லண்டனில் காந்திஜியைச் சந்தித்த நிகழ்ச்சிக்குப் பிறகு, அதுவரையில் கவிதை வானில் பறந்த சரோஜினியார், பெண் விடுதலை, நாட்டு விடுதலைப் போராட்டத்தில் குதித்தார். ஜாலியன்வாலாபாக் படுகொலையைக் கண்டித்து, தமக்குப் பிரிட்டிஷ் சர்க்கார் அளித்திருந்த கெய்ஸர்—இ ஹிந்த் பதக்கத்தைத் திருப்பித் தந்தார்.

1925ம் ஆண்டில் கான்பூர் காங்கிரசுக்குத் தலைமை வகித்தார். காந்திஜியுடன் 1931ம் வட்டமேஜை மகாநாட்டில் கலந்து கொண்டார். பல முறை சிறை சென்றிருக்கிறார்; கடைசியில் இந்தியா சுதந்திரம் பெற்றது. உத்தரப் பிரதேசத்துக்குக் கவர்னராக நியமனமானார். பெண் குலத் திலகமாக வாழ்ந்த சரோஜினி தேவி 1950 மார்ச் இரண்டாம் தேதி உயிர் துறந்தார். அவரது ஜன்மதினத்தையொட்டி இவ்வாரத்தில் அரசினர் அவர் உருவம் தாங்கிய தபால் தலையை வெளியிடுகின்றனர். நாமும் கரம் கூப்பிக் கவிக் குயிலுக்கு அஞ்சலி செய்வோம்.-கி. தா.

நான் எப்பொழுதும் சிறந்ததையே
உபயோகிக்கிறேன்
நான் தேர்ந்தெடுப்பது எவரெஸ்ட்




# எவரெஸ்ட் தையல் மெஷின்

தயாரிப்பாளர்கள்: சாரதா மெஷினரி கார்ப்பொரேஷன்
தலைமை ஆபீஸ்: 11, பூசா ரோடு, புதுடில்லி-5.
பாக்டரி: சதர்ன் டிரங்கு ரோடு, குரோம்பேட், மதராஸ்.

அட்மினிஸ்ட்ரேடிவ் & சேல்ஸ் ஆபீஸ்

சதர்ன் டிரங்க் ரோடு, குரோம்பேட்டை, சென்னை-44

# விநாயகருக்கு ஒரு வீடு!

செல்வபுரத்தில் எத்தனையோ விசேஷங்கள் உண்டு. அவற்றில் ரொம்ப முக்கியமானது ஒன்று உண்டு. அதாவது அந்த ஊரின் பெயருக்கும், அந்த ஊர்வாசிகளின் செல்வ நிலைக்கும் எவ்விதத் தொடர்பும் கிடையாது. ஒரு சிறு மானுமாரிக் குளமும், அதன் மடையடியில் இருக்கும் பதினைந்து ஏக்கரா நிலமும்தான் அவ்வூர்வாசிகளின் செல்வக் களஞ்சியம். 'நஞ்சை' என்றதும் வருஷம் முப்போகம் விளையும் பூமி என்ற பொருளை யாரும் கொள்ள வேண்டாம். அவற்றுக்குச் சர்க்கார் வரி விதிப்புக் கணக்குத்தான் நஞ்சை என்ற அந்தஸ்து. மற்றப்படி அந்த மானுமாரிக் குளத்தை நம்பிய பிழைப்புத்தான். குளம் நிரம்பினால் ஒரு போகம் விளையும். இல்லாவிட்டால் தரிசுதான்.

அந்தக் குளமும் நிரம்பி, அந்த நிலங்களும் முழு விளைச்சல் கொடுத்தால் கிராமவாசிகளுக்குப் பட்டினி இல்லை. ஆனால் அதுதான் நடக்காது. மழைக்கு உற்சாகம் வந்துவிட்டால் குளத்தையும் நிரப்பிக் கரையையும் உடைத்து விடும். இல்லாவிட்டால் குளத்தைக் காயவைத்து ஒத்துழையாமை பண்ணும். எப்போதாவது முக்கால் விளைச்சல் தேறிவிட்டால், ஊரெங்கும், 'இந்த வருஷம் கொழுத்த மகசூல்' என்ற பேச்சாக இருக்கும். முக்கால் வயிறாவது நிரம்புமே!

இந்தக் கால் பட்டினிவாசிகள் மத்தியில் முக்கால் பட்டினி நபர் ஒருவர் இருந்தார். அவர்தான் அந்த ஊரின் முடிசூடா மன்னரான குளத்தங்கரை செல்வ விநாயகர்!

விநாயகப் பெருமான் தம் கிராமக் குடிபடைகளையும் விடப் பரம தரித்திரர். அரைப் பட்டினியோ, கால் பட்டினியோ கிராமவாசிகள் நித்தம் ஒரு வேளையாவது சாப்பிட்டு வந்தார்கள். ஆனால் விநாயகருக்கோ வாரத்தில் ஐந்து நாட்கள் அன்னத் துவேஷம். செவ்வாய்க் கிழமையும், வெள்ளிக் கிழமையும்தான் ஏதோ ஆழாக்கு அரிசி நைவேத்தியம் அவருக்கு. மற்ற நாளிலெல்லாம் வாயு பட்சணம்தான். அவருக்கு ஜாகை வசதியோ இன்னும் மோசம். குளத்தை அடுத்து ஒரு கற் பீடத்தில் தன்னந்தனியாக வாசம் பண்ணிக் கொண்டிருந்தார். எப்போதோ ஒரு காலத்தில் ஓர் அரச மரம் அவருக்கு நிழல் கொடுத்துக் கொண்டிருந்ததாகவும், பின் அது வயதான தோஷத்தால் ஒரு சிறு புயல் காற்றில் பிள்ளையாரின் காலடியில் விழுந்து பிராணத் தியாகம் செய்து முக்தி அடைந்து விட்டதாகவும் ஊரில் உள்ள 'சீனியர்' கிழவர்கள் பேசிக் கொள்வார்கள். ஆக மொத்தத்தில் இரண்டு மூன்று தலைமுறைகளாக விநாயகரின் குடித்தனம் ஏகாந்த வெளியில்தான் நடந்தது.

இந்த நிலையிலும் செல்வவிநாயகர் பெரும் செல்வந்தராகவே புன்னகை புரிந்துகொண்டிருந்தார். காரணம் வேறொரு முறையில் அவர் ஒரு மகத்தான செல்வத்துக்கு அதிபதியாகவே இருந்தார். அதுதான் செல்வபுர வாசிகளின் அபூர்வ பக்திச் செல்வம். அந்த அரைப் பட்டினிகளுக்கு இந்த முக்கால் பட்டினி விநாயகரும் அவருடைய மோகனச் சிரிப்பும்தான் சகல செல்வமும். இவருக்கு அவர்கள்தான் சம்பத்து.

நெடுநாட்களாகக் கிராமவாசிகளுக்கு ஓர் ஆசை. வெட்ட வெளியில் தங்குவதற்குத் தாவாரமின்றி இருக்கும் விநாயகருக்கு ஒரு கோவில் கட்டி, அவரை வீடும் குடியுமாக்கி விடவேண்டுமென்பதே அது. அதற்காக ஊரார் செய்த முயற்சிகள் எவ்வளவோ! ஆனால் அந்த விஷயத்தில் பிள்ளையார் ரொம்பவும் துரதிர்ஷ்டக் கட்டையாக இருந்தார்!

ஊருக்குள் கொஞ்சம் பசையாக இருக்கும் போது முதன் முதலாக நடவடிக்கை எடுக்கப்பட்டது. வீட்டுக்கு வீடு நவதானியமும் பணமுமாக வசூல் செய்தார்கள். ஐந்நூறு ரூபாய்வரை தேறிவிட்டது. பிரம்மச்சாரிப் பிள்ளையாருக்கு சிங்கிள் ரூம் ஒன்று கட்ட அது போதாதா? போதும் போதாததற்கு உள்ளூர் என்ஜினீயரான கந்தசாமிக் கொத்தனார் இலவசமாக எஸ்டிமேட் தயாரித்துக் கொடுத்ததுடன், தம் பரிவாரங்களுடன் பிள்ளையாருக்காக மூன்று நாட்கள் ஓசியிலும், பின் முக்கால்ரேட் கூலியிலும் வேலை செய்ய ஆயத்தமானார். (மூன்று நாட்களுக்கு மேல் பட்டினி கிடக்க அவர்களுக்குக் கட்டுப்படியாகாதல்லவா!)

கோவில் கட்டிட வேலை ஆரம்பிக்கவேண்டியதுதான் பாக்கியாக இருந்தது. அச்சமயம் திடீரென்று கனத்த மழை பெய்து குளம் உடைப்பெடுத்து விட்டது. குளத்துக்குள் அடைபட்டுக் கிடந்த நீருக்கும் கிராமத்திலுள்ள குடிசைகளுக்கு வந்து குடியேற வேண்டும் என்ற ஆசை ஏற்படவே, ஊருக்குள் நுழைந்து விட்டது. வெள்ளம் நுழைந்ததும், 'மனிதர் அல்லாது மற்றவர்களை உள்ளே வர அனுமதிப்போமா?' என்ற ரோஷத்துடன் சில கற்புடைய குடிசைகள் கீழே விழுந்து உயிரைப் போக்கிக் கொண்டன. பதினைந்து கிராமவாசிகள் பிள்ளையாரைப் போலவே பார்த்த வெளிவாசிகளாகி விட்டார்கள்.

உடனே ஊர் கூடியது. ஓர் இளவட்டம் தன் அரும்பு மீசையை முறுக்கிக்கொண்டு பிள்ளையார் மேல் பாய்ந்தான். "நாம் ஊரைக் காக்கக்கூடிய பொறுப்பைப் பிள்ளையார்கிட்டே விட்டோம். ஆனால் அவரு தன்னோட வாட்ச்மேன் உத்தியோகத்தைச் சரியாகக் கவனிக்கவில்லை. வெள்ளத்தை விட்டுட்டார். அதனால் அவர்தான் நஷ்ட ஈடு கொடுக்கணும்" என்றான். அவன் பட்டணம் போய் 'நாலும்' தெரிஞ்சவன். அதனால் எப்போதும் 'லா பாயிண்டோ'டுதான் பேசுவான் அவன்.

தாமரை மணாளன்

'தர்மகர்த்தா சிவலோகநாத பிள்ளை சிரித்துக்கொண்டே, ''அதுக்கென்ன? விநாயகர் ஒன்றும் கோவிச்சுக்க மாட்டார். சந்தோஷப் பட்டுக்கத்தான் செய்வார். கையிலே சேர்ந்திருக்கிற பணத்தை வைத்து இவர்களுக்குக் குடிசை கட்டிக் குடுப்போம். கோவிலே அப்புறம் கட்டிக்குவோம்'' என்றார்.

ஆக, நமக்கு வீடு கட்டச் சேர்த்து வைத்திருந்த பணத்தை அபராதம் கட்டிவிட்டார் பிள்ளையார்.

அதற்கப்புறம் கிராமவாசிகள் சரியாக மூச்சு விட மூன்று வருஷங்கள் ஆயிற்று. பின்னரும் ஏதேதோ முயற்சிகள் நடந்தன. அவற்றுக்கும் ஏதேதோ தடைகளும் ஏற்பட்டன. இப்படியாக வெகு காலமாகப் பிள்ளையாருக்கு வீட்டு வாசப் பிராப்தமில்லாமலேயிருந்தது. 'நம்ம பிள்ளையாருடைய ஜாதகம் நம் எல்லோருடையதையும் விட தோஷமாக இருக்கும் போலிருக்கே' என்று கிராமவாசிகளுக்குக் கவலையாகப் போய்விட்டது. அவருடைய ஜாதகத்தைக் கணித்துப் பார்த்து, அதில் 'கிரக' தோஷம் இருந்தால் ஏதாவது ஒரு சாந்தி கழிக்கலாம் என்பதாகச் சிலருக்கு யோசனை. ஆனால் பிள்ளையாரின் ஜாதகம் கைவசமில்லாததாலும் அவருடைய ஜென்ம லக்கின விவரங்கள் யாருக்கும் தெரியாததாலும் அந்த யோசனை கைவிடப்பட்டது.

ஒரு நாள் செல்வபுரம் மிகவும் அமளி துமளிப்பட்டது. என்றுமில்லாத புதுமையாக ஜீப் கார் ஒன்று தெருக்களுக்குள் குறுக்கும் நெடுக்குமாக 'டர் டர்' என்று ஓடியது. சிறுவர்கள் எல்லோரும் மாடு பூட்டாமல் ஓடுகிற மொட்டை வண்டியைப் பார்க்கிற அதிசயத்தில் அதன் பின்னாலேயே ஓடிக்கொண்டிருந்தார்கள். பெரியவர்களெல்லாரும் பிரிட்டிஷ்காரன் காலத்தில் பட்டாளத்தான்கள் வந்த மாதிரி யாரோ வந்திருக்கிறார்கள் என்ற கலவரத்தில் வீட்டுக்குள் நுழைந்து கதவை அடைத்துக் கொண்டு ஜன்னல் வழியாகக் கவனித்துக் கொண்டிருந்தார்கள்.

வந்தவர்கள் வெகு பிரயாசையுடன், ரொம்பத் தைரியசாலிகள் இரண்டு மூன்று பேரை வீட்டுக்குள்ளிருந்து வெளியே வரவழைத்து விஷயத்தைத் தெரிவித்தார்கள். நாட்டில் தேர்தல் நடக்கிறதாம். கிராமத்திலுள்ள இந்நாட்டு மன்னர்கள் தங்கள் பொன்னான ஓட்டுக்களை ஜீப் காரில் வந்திருக்கும் பிரமுகருக்கு அளித்து ஜனநாயகத்தைத் தழைக்க வைக்க வேண்டுமாம்.

விஷயம் காதில் விழுந்ததும், ''ஓகோ! ஓட்டுப் போடறதா? நாலஞ்சு வருஷங்களுக்கு முந்திக்கூட நாமெல்லாம் போட்டோமே, அதுதானே?'' என்று தங்கள் விஷய ஞானத்தை வெளிப்படுத்திக் கொண்டு எல்லோரும் கூடி விட்டார்கள்.

கூட்டம் கூடியதும் புதுப் பிரமுகர்களுக்கு உற்சாகம் பிறந்து விட்டது. நாட்டின் வளர்ச்சி, ஜனநாயகம், அயல் நாட்டுக் கொள்கை, உள்நாட்டுத் தகராறு, ஆட்சி என்பதையெல்லாம் ஏகமாக அலசி விமரிசிக்க ஆரம்பித்து விட்டார்கள். பேச்சில் சூடேறச் சூடேறக் கிராமவாசிகள் திறந்த வாய் மூடாமல் அதிசயித்துப் போனார்கள்! 'நாம் பேசற தமிழிலே, நமக்குக் கொஞ்சம் கூடப் புரியாமல் எவ்வளவு அழகாகப் பேசறாங்க!' என்று ரொம்பவும் ஆச்சரியமாகி விட்டது அவர்களுக்கு.

ரொம்ப நேரத்துக்குப் பின்னர் தான் பேசியவர்களுக்குத் தங்கள் சாமர்த்தியம் புரிந்தது.



புரிந்ததும் நெற்றியைத் தேய்த்துக்கொண்டு உட்கார்ந்து விட்டார்கள். இனி எதைச் சொல்லிப் புரிய வைப்பது?

வந்தவர்களில் ஒருவர் கொஞ்சம் அநுபவசாலியாக இருந்தார். அவர் கிராமவாசிகளுக்குப் புரிகிற பாஷையில் பேச ஆரம்பித்தார். "இப்ப உங்க ஊருக்கு நல்ல காரியம் ஏதாச்சும் செய்யணும்னு சொல்லுங்க. எங்க ஐயா செஞ்சு தந்துடுவாரு. நீங்க உங்க ஓட்டை யெல்லாம் ஐயாவுக்குப் போட்டுடுங்க."

ஊர்க்காரர்களுக்கு விவரம் புரிந்து விட்டது. உடனே பெருந் தலைகளெல்லாம் தனியாகக் கூடி ஆலோசித்துத் தங்கள் முடிவைத் தெரிவித்தார்கள்.

"வேறொன்றும் வேண்டாமுங்க. எங்க பிள்ளையாருக்கு ஒரு சின்னக் கோவில் கட்டிக் குடுத்துடுங்க. போதும்."

அவ்வூர் ஓட்டர்களின் மொத்த எண்ணிக்கையையும், பிள்ளையாருக்குக் கோவில் கட்ட ஆகக் கூடிய செலவையும் கணக்கெடுத்துப் பார்த்தார் பிரமுகருடன் வந்த காரியஸ்தர். பின் தம் கணக்கு முடிவைப் பிரமுகரிடம் தெரிவித்தார். பிரமுகரின் தலை உற்சாகமாக அசைந்தது.

"அப்படியே செய்துவிடுவோம்."

அவ்வளவுதான்; தேர்தல் பிரசாரம் முடிந்தது. வந்தவர்கள் திரும்பி விட்டார்கள்.

"நம்ம கஷ்டத்தைப் பார்த்துப் பிள்ளையாரே ஒரு ஆளை அனுப்பித் தம்முடைய காரியத்தை முடிக்க ஏற்பாடு பண்ணி விட்டார்!" என்று கிராமத்தார்களுக்குப் பரமானந்தம் ஏற்பட்டது.

செல்வபுரத்து மகா ஜனங்களின் அமோக ஆதரவைப் பெற்ற பிரமுகரே அந்த ஜன நாயகத் தேர்தலில் வெற்றி வாகை சூடினார். மற்ற ஊர்களிலும் அவ்வாறு அமோக ஆதரவைப் பெற்றிருப்பார் அல்லவா?

செல்வபுரத்தார்கள் திரண்டு சென்று பிரமுகரிடம் பிள்ளையார் விஷயத்தை நினைவூட்டினார்கள். பிரமுகருக்கு அந்த விஷயத்தில் பழைய ஈடுபாடு இல்லாவிட்டாலும், அடுத்த தேர்தலை நினைவு கொண்டாரோ என்னவோ, கோவில் கட்ட அவர் ஏற்பாடு செய்து விட்டார்.

எல்லா வேலைகளும் முடிந்து விட்டன. அன்று கும்பாபிஷேகம். செல்வ விநாயகர் புது மனை புகுவதற்குத் தயாராக எண்ணெய் நீராடிவிட்டுப் பிரமுகரின் வருகைக்காகக் காத்திருந்தார்.

பிரமுகர் காரில் வந்திறங்கினார். அவரோடு இன்னும் சில பிரக்யாதி பெற்ற பிரமுகர்களும் விசேஷ அழைப்பின் பேரில் காமிரா



சகிதம் சில பத்திரிகை நிருபர்களும் பிரசன்னமானார்கள்.

காருக்குள்ளிருந்து தங்க நிற எழுத்துக்களால் பட்டயம் எழுதப்பட்ட ஒரு பளிங்குக் கல்லை இரண்டு பேர்கள் எடுத்து, தயாராகக் காத்துக் கொண்டிருந்த கொத்தனிடம் கொடுத்தார்கள். கொத்தனார் அதைக் கோவில் கட்டிடச் சுவரில் பொருத்தினார்.

அதை வாசித்துப் பார்த்த கிராமவாசிகள் திகைத்துப் போனார்கள். அதில் முன்னாலும், பின்னாலும் பல விருதுகளுடன் பிரமுகரின் பெயரையும் பொறித்து, கோவில் அவரால் செய்யப்பட்ட 'தர்மம்' என்ற விவரமும் எழுதியிருந்தது.

தர்மகர்த்தா சிவலோகநாதர் மனம் பொறுக்க முடியாமல் பிரமுகரிடம் சென்று, "ஐயா! இந்தப் பட்டயம் வேண்டாமுங்க. விநாயகப் பெருமானுக்கு நாம தர்மம் கொடுக்க முடியுமுங்களா? நீங்க இந்தக் கைங்கரியத்தைச் செய்தது நமக்கும் தெரியும்; பிள்ளையாருக்கும் தெரியும். அப்புறம் ஏன் எழுதி வைக்கணும்?" என்று சற்றுக் குறையுடன் கேட்டார்.

உடனே அருகிலிருந்த பிரமுகரின் காரியஸ்தர் அவரிடம் ரகசியமாக, "என்னய்யா இப்படிப் பேசறீங்க? இது நமக்குத் தெரியும் கிறது சரி. இனிமேல் பிறக்கப் போறவங்களுக்குத் தெரியுமா? ஒவ்வொரு தேர்தல் சமயத்திலும் ஒவ்வொரு கோவில் கட்டிக் கொடுக்க முடியுமா?" என்று கேட்டார்.

தர்மகர்த்தா உட்பட அத்தனை கிராமவாசிகளும் விக்கித்து நின்றுவிட்டனர்.

ஆனால் அவர்களுக்காகக் காரியங்கள் ஒன்றும் நின்றுவிடவில்லை. பட்டயம் பிரகாசமாகவே விளங்கியது. பிள்ளையாரும் புதுக் கோவிலுக்குள் பிரதிஷ்டையானார். வந்திருந்த பிரமுகர்கள் 'தேர்தல் பிரமுகரின்' தர்ம சிந்தையைப் பற்றியும், பக்தி வெள்ளத்தைப் பற்றியும் அமோகமாகப் புகழ்ந்தார்கள். அவற்றைப் படங்களுடன் பத்திரிகைகள் பிரசுரிக்க விருந்தன.

இவ்வாறு கோலாகலமாகக் கும்பாபிஷேக விழா நிறைவுற்றது. வந்தவர்கள் மன நிறைவுடன் திரும்பினர். வழி நெடுக, மறுநாள் பத்திரிகையில் போட்டோவுடன் வெளிவரவிருக்கும் கும்பாபிஷேகச் செய்திகளைப்பற்றிய பூரிப்பான பேச்சு கார்களில் நிறைந்திருந்தது.

பிரமுகர்கள் சென்றபின் அதுவரையில்விழாவைக் காண வராமலிருந்த ஒரு விருந்தாளி வெகு அவசரமாகப் பலத்த ஆர்ப்பாட்டத்துடன் செல்வபுரத்துக்கு வந்து சேர்ந்தான். வேறு யாருமில்லை, நல்லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு எல்லாரிடமும் வரும் வருண பகவான்தான். பின்னே? இவ்வளவு புண்ணிய காரியத்தை ஒருவர் செய்திருக்கும்போது மழை வர்ஷிக்காமல் இருந்தால் எப்படி?

அன்றிரவு முழுவதும் பிரளயமழை. ஊர்க் குளம் பெருக்கெடுத்துக் கரை மேவிப் பாய்ந்து விட்டது. மறு நாள் காலையில்தான் மழையும் வெள்ளமும் நிதானப் பட்டன. வெள்ளத்தை வேடிக்கை பார்க்க வந்த கிராமவாசிகள் அந்தக் காட்சியைக் கண்டு பிரமித்து நின்றார்கள்.

# பல்லியும் திருப்பள்ளியும்















பிரமுகர் கட்டிய கோவில் கட்டிடம் மழையில் ஊறிவிழுந்து வெள்ளத்தில் கரைந்து போய்க் கொண்டிருந்தது. அத்தனை உறுதியாகக் கட்டப்பட்டிருந்தது அது. செல்வ விநாயகர் மட்டும் ஆடாமல் அசையாமல் தம் எண்ணெய் மேனி பளபளக்க மோகனப் புன்னகையுடன் தம் கற்பீடத்தில் ஏகாந்தமாக உட்கார்ந்து கொண்டிருந்தார்.

"ஐயனே! நீ இந்த ஏழைகளுடைய தெய்வம். எங்களுடைய நிலைமை அறிந்து வேறு எந்தக்கோவிலையும் விரும்பாமல் எங்கள் நெஞ்சையே உன் கோவிலாக்கிக் கொண்டாய். எந்தப் போலி ஆர்ப்பாட்டமும் உன்னைக் கட்டுப்படுத்த முடியவில்லை?" என்றார் தர்மகர்த்தா சிவலோகநாதர் கண்கலங்க.

என்றும் மாறாத தம் இளம் புன்னகை ஒளி வீசக் கம்பீரமாக அமர்ந்திருந்தார் குளத்தங்கரைச் செல்வ விநாயகர். அந்த ஆனந்தக் காட்சியில் அந்த ஏழைகள் செல்வத்தைக் கண்டு மெய்மறந்து நின்றனர்.

# மக்லீன்ஸ்

உபயோகித்து
அந்த அதிகமான வெண்மையைப்
பாருங்கள்!





**இவ்விதம் சோதியுங்கள்**

1. உங்கள் நாக்கினால் பற்களைத் தடவுங்கள். அவற்றின் மேலுள்ள பாசியையுணர்கிறீர்களா?
2. இப்போது, மக்லீன்ஸ் பற்பசைகொண்டு பற்களைத் தேயுங்கள். அது பற்களைச் சுத்தம் செய்து, வெண்மையாக்கிக் காப்பதுடன் உங்களுக்குப் புதுமையான உணர்ச்சியை அளிப்பதை உணர்வீர்கள்.
3. அந்த அதிகமான சுத்தத்தை உணருங்கள்... அந்த அதிகமான வெண்மையைப் பாருங்கள்.




மக்லீன்ஸ் பழுப்பு நிறமடைந்த
பற்களை வெண்மையாக்குகிறது!

MTP/UP/2-63-TM




✿ சந்திரன் பாங்குகுமாஸ்தா. முதன் முதலில் அவனுக்கு முதலூரில் வேலை கிடைத்தது. அங்கேயே கல்யாணமாகி முதல்குழந்தையும் பிறந்தது. அந்தக் குழந்தை பிறந்த பின் அவனுக்கு இரண்டாங் கட்டளைக்கு மாற்றலாகியது. இரண்டாங் கட்டளையில் வேலைசெய்தபோது அவனுக்கு ஓர் இரட்டைக் குழந்தை பிறந்தது. அப்புறம் மூனாறுக்கு மாற்றினார்கள். அங்கே மூன்று பெண்களுக்குத் தந்தையானான்.

அவனுக்கு இப்பொழுது மீண்டும் மாற்றல் உத்தரவு வரவே, மானேஜரைப் பார்க்க ஓடினான். அந்த மாற்றல் உத்தரவை எப்படியாவது ரத்து செய்துவிட வேண்டுமென்று வேண்டினான்.



காரணம் கேட்டார் மானேஜர். 'முதலூரில்இருந்தபொழுது முதற் குழந்தை பிறந்தது. இரண்டாங் கட்டளைக்கு மாற்றியபொழுதுஇரட்டைக் குழந்தைகள் பிறந்தன. அப்புறம் மூனாறுக்கு மாற்றினீர்கள். மூன்று பெண்கள் பிறந்தார்கள்!இப்பொழுது மாற்றியிருக்கும் இடத்துக்குப் போனால் என் குடும்பம் மிக மிகப் பெருகி விடுமே, சார்!'' என்று கூறினான்.

'' இப்பொழுது எந்த ஊருக்குப் போட்டிருக்கிறது?'' என்று கேட்டார் மானேஜர்.

'ஒன்பத்து வேலிக்கு. அடுத்த படியாக ஆயிரம் விளக்குக்கு மாற்றி விட்டால் என் கதி என்ன ஆவது?'' என்று அலறினான் சந்திரன்.



✿ அன்று அந்தச் சங்கத்துக்கு ஆண்டு விழா. சிறப்புச் சொற்பொழிவாளர் பேசிக்கொண்டிருக்கும்போது 'மைக்' 'மக்கர்' செய்து விட்டது. மைக்கை அப்பால் நகர்த்தி வைத்துவிட்டு அவர் உரத்த குரலில் பேசலானார். சிறிது நேரம் பேசிய பின், கையைத் தூக்கிப் பின் வரிசையில் உட்கார்ந்திருப்பவர்களைப் பார்த்து, ''நான் பேசுவது உங்கள் காதில் விழுகிறதா?'' என்று கேட்டார்.

ஒருவர் எழுந்து, ''நீங்கள் பேசுவது துளிக் கூட எங்கள் காதில் விழவில்லை. இன்னும் சற்று உரக்கப் பேசுங்கள்!'' என்றார்.

அதற்குள் முன் வரிசையில் உட்கார்ந்திருந்த ஒருவர் எழுந்து, ''உங்களுக்குக் காதில் விழவில்லையா? நீங்கள் அதிர்ஷ்டசாலிகள். ஆனால் எங்களுக்கு நன்றாகக் காதில் விழுகிறது. நீங்கள் விரும்பினால் நாம் இருவரும் இடமாற்றம் செய்து கொள்ளுவோம். நீங்கள் இப்படி முன்னுக்கு வந்து விடுங்கள். நான் அங்கே போய் விடுகிறேன்!'' என்றார்.

✿ ஒரு பெண்மணியை வெறிநாய் ஒன்று கடித்து விட்டது. டாக்டரிடம் சிகிச்சைக்குப் போனாள். ''நோய் சிகிச்சைக்குஅப்பால் போய் விட்டது. 'ஹைட்ரோபோபியா'வே கண்டு விட்டது. இனி சிகிச்சை பலனளிக்காது. உங்களுக்கு ஏதாவது கடைசி ஆசை இருந்தால் சொல்லுங்கள்'' என்று கூறி விட்டார்.

உடனே அந்தப் பெண்மணி காகிதம் பேனாவை எடுத்துக் கொண்டு விடுவிடு என்று என்னவோ எழுதலானாள். காகிதங்கள் ஒன்றுக்கு மேல் ஒன்றாக அதிகரித்துக் கொண்டே போயின.

''உங்கள் கடைசி ஆசைகள் எண்ணிக்கையில் அதிகமாயிருக்கும் போல் இருக்கின்றனவே!'' என்றார் டாக்டர்.

''ஆசைகளா? எனக்கா? நன்றாய்ச் சொன்னீர்கள் டாக்டர்! இந்த விடுதியிலிருந்து வெளியேறியதும் யார் யாரை யெல்லாம் நான் கடிக்க வேண்டும் என்று குறிப்பு எடுத்துக் கொண்டிருக்கிறேன். அவ்வளவுதான்'' என்றாள் அந்தப் பெண்மணி.

✿ ''நேற்றிரவு ஒரு மயிரிழையில் நான் உயிர் தப்பினேன்!''

''ஏன்? என்னவாயிற்று?''

''நள்ளிரவு ஏதோ ஓர் ஓசை கேட்டுக் கண் விழித்தேன். மூலையில் வெளுப்பாக ஓர் உருவம் நின்று கொண்டிருந்தது. சட்டென்று துப்பாக்கியை எடுத்துக் கண்ணை மூடிக் கொண்டு குறி பார்த்துப் பட்டென்று சுட்டு விட்டேன்...!''

''அப்புறம்?''

''அப்புறம் என்ன? எழுந்து விளக்கைப் போட்டுப் பார்த்தால் நான் கழற்றி மாட்டியிருந்த சட்டை அது!''

''பூ! இவ்வளவுதானா?''

''என்ன அப்படிச் சொல்லிவிட்டாய்?''



''நீ சட்டையைச் சுட்டதற்கும் உயிர் தப்புவதற்கும் என்ன சம்பந்தம்?''

''என்ன சம்பந்தமா? நான் தூங்கும் பொழுது சட்டையைக் கழற்றி மாட்டாமல் போட்டுக் கொண்டிருந்தால் என்னவாகியிருக்கும்? என் கைத் துப்பாக்கி என்னையே சுட்டுத் தீர்த்திராதா?''



Printed & Published by R Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

